உ

கீதைக்கோத்து] ஸ்ரீராமாய நம: [உ-ம் புத்தகம்.

ஸ்ரீ வியாஸமுநிவர் அருளிச்செய்த

# ॥ श्री रामगीता ॥

# ஸ்ரீ ராமகீதை.

இது

தஞ்சைமாநகரம்

**ஸ்ரீமாந். வெ. குப்புஸ்வாமிராஜு அவர்கள்**

இயற்றிய

தமிழ்வியாக்கியானத்துடன்


தஞ்சை

வி. கோவிந்தன் & பிரதர்ஸ் அவர்களால்

தமது

ஸ்ரீ வித்தியாவிநோதினி முத்திராசாலையில்

பதிக்கப்பெற்றது.





ஸௌமிய-௵

விலை] [அணா [illegible]

ஸ்ரீஸத்குரும்[illegible]



# முகவுரை.

கீதைக்கொத்தின் இரண்டாவது புத்தகமாகிய இந்த ஸ்ரீ ராமகீதை ஸ்ரீ வேதவியாசமுனிவரால் செய்யப்பட்ட ஸ்ரீமத் அத்தியாத்மராமாயணம் உத்தரகாண்டத்தின் ஐந்தாவது சர்க்கத்தில் ஸ்ரீ உமாமகேசுவரசம்வாதவடிவமாயுள்ளது. இது ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியானவர் லோகாபவாதத்தின்பொருட்டு ஸ்ரீ சீதாப்பிராட்டியாரைக் காட்டிற்கனுப்பிய பின்னர்த் தனித்திருக்குங்கால் ஸ்ரீலக்ஷ்மணப்பெருமானுக்கு உபதேசித்தருளிய ஓர் அற்புத அத்தியாத்மநூல். இதில் வேதாந்தத்தின் பாரிபாஷிக அர்த்தங்கள் எளிதில் தெரியத்தக்கனவாயும், அவற்றின் தாற்பரியத்தினை மனதிற் கொண்டுவந்து இலேசாக அநுசந்திக்கத்தக்கனவாயும், வேதாந்தமதத்தின் தன்மையினை பூர்ணமாய்த் தெரிந்து கொள்ளுதற்குத் தகுதியுள்ளனவாயும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால் இஃது எல்லா முமுக்ஷுக்களுக்கும் இன்றியமையாதநூலாம். தமிழ்மாத்திர முணர்ந்தவர்களும் தமிழும் சம்ஸ்கிருதமு முணர்ந்தவர்களுமாகிய இருதிறத்தார்க்கும் உபயோகப்படுமாறு இது தேவநாகர எழுத்தில் பல பிரதிகளைக்கொண்டு சோதிக்கப் பெற்ற சம்ஸ்கிருத மூலசுலோகங்களும், அவற்றிற்குத் தஞ்சைமாநகரம்

ஸ்ரீமான். வெ. குப்புஸ்வாமிராஜு அவர்களா லியற்றப்பட்ட தமிழ் வியாக்கியானமும், குறிப்புரையும் சேர்த்துப்பிர சுரிக்கப்பட்டது. இது சென்னைராஜதானியில் நவீன மாய் வெளிப்பட்டுள்ள இராமகீதை யன்று; அத்தியாத்மரா மாயணத்துள்ள பழைமையான பிரசித்த நூல். இதனை வடதேசத்துள்ளோர் யாவரும் தினந்தோறும் பாராயணஞ் செய்து வருவது பிரசித்தம். இதன் பெருமையைப் பின் வரும் மாகாத்மியசுலோகங்களால் காண்க.

வி. கோவிந்தன் & பிரதர்ஸ்,
தஞ்சை.

श्रीगणेशाय नमः ।

# ஸ்ரீ ராமகீதாமாஹாத்மியம்.

श्रीरामगीतामहात्म्यं कृत्स्नं जानाति शंकरः ।
तदर्धं गिरिजा वेत्ति तदर्धं वेद्म्यहं मुने ॥ १ ॥

ஸ்ரீ ராமகீதையின் மாகாத்மியம் (பெருமை) முழுவத னையும் ஸ்ரீ சங்கரன் அறிவார். அதிற்பாதி பார்வதிதேவி யார் அறிவர். முனிவரே! அதிற்பாதி யான்அறிவேன். (க)

तत्ते किंचित्प्रवक्ष्यामि कृत्स्नं वक्तुं न शक्यते ।
यज्ज्ञात्वा तत्क्षणाल्लोकश्चित्तशुद्धिमवाप्नुयात् ॥ २ ॥

எந்த மாகாத்மியத்தை யறிதலால் உலகத்தினர் அக் கணமே சித்தசுத்தியை அடைவரோ, அதனை யுனக்குச் சிறிது சொல்லுகிறேன். முழுவதும் சொல்லக்கூடிய தன்று. (உ)

श्रीरामगीता यत्पापं न नाशयति नारद ।
तन्न नश्यति तीर्थादौ लोके क्वापि कदाचन ॥
तन्न पश्याम्यहं लोके मार्गमाणोऽपि सर्वदा ॥ ३ ॥

நாரதரே! ஸ்ரீ ராமகீதை எந்தப் பாபத்தினைக் கெடுக் கின்றதோ, அந்தப் பாபம் உலகத்தில் ஓரிடத்தும் ஒருபோ

தும் தீர்த்தமுதலியவற்றில் கெடாது. உலகத்தில் அதனை (ராமகீதையினால் கெடாத பாபத்தினை)த் தேடிப்பார்த்தும் எப்போதும் காணேன். (௩)

रामेणोपनिषत्सिन्धुमुन्मथ्योत्पादितां मुदा ।
लक्ष्मणायार्पितां गीतासुधां पीत्वाऽमरो भवेत् ॥ ४ ॥

ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியினால் உபநிஷதவடிவ சமுத்திரத்தைக் கடைந்து உண்டுபண்ணப்பட்டதும், களிப்போடு லக்ஷ்மணருக்களித்ததுமான ஸ்ரீ ராமகீதாமிருதத்தினைப் பருகிப் புருஷன் அமரனாகின்றான். (௪)

जमदग्निसुतः पूर्वं कार्त्तवीर्यवधेच्छया ।
धनुर्विद्यामभ्यासितुं महेशस्यान्तिकेऽवसत् ॥ ५ ॥

ஜமதக்கினிபுதல்வர் (பரசுராமர்) முன் கார்த்தவீரியார்ஜுனனைக் கொல்லும் விருப்பால் வில்வித்தையைப் பழகுவதற்கு மகேசன்சமீபத்தில் வசித்தார். (௫)

अधीयमानां पार्वत्या रामगीतां प्रयत्नतः ।
श्रुत्वा गृहीत्वाऽऽशु पठन्नारायणकलामगात् ॥ ६ ॥

அவர் பிரயத்தினபூர்வகமாக உமாதேவியாரால் அத்தியயனஞ்செய்யப்படும் ராமகீதையினைச் சிரவணஞ்

செய்து அதனைக் கிரகித்துப் படித்து விரைவில் நாராயணனது கலையினைப் பெற்றார். (௬)

ब्रह्महत्यादिपापानां निष्कृतिं यदि वाञ्छति ।
रामगीतां माससमात्रं पठित्वा मुच्यते नरः ॥ ७ ॥

பிரஹ்மஹத்தியாதி பாபங்களின் விடுபாட்டை விரும்பினால் ஸ்ரீராமகீதையினை மாசமாத்திரம் படித்து நரன் விடுபடுகின்றான். (௭)

दुष्प्रतिग्रहदुर्भोज्यदुरालापादिसंभवम् ।
पापं यत्तत् कीर्तनेन रामगीता विनाशयेत् ॥ ८ ॥

பிறர்கையில் வாங்கக்கூடாதவைகளை வாங்குதல், கெட்டவுணவுகளைக் கொள்ளுதல், தீச்சொல் இவை முதலியவற்றாலாம் பாபங்களை ராமகீதையானது தன்னைக் கீர்த்தித்தலால் உடனே மிகக் கெடுக்கின்றது. (௮)

शालग्रामशिलाग्रे च तुलस्यश्वत्थसन्निधौ ।
यतीनां पुरतस्तद्वद्रामगीतां पठेत्तु यः ॥
स तत्फलमवाप्नोति यद्वाचोऽपि न गोचरम् ॥ ९ ॥

சாலக்கிராமசிலையின் முன்னும், துளசி அரசு என்பவற்றின் முன்னும், அதுபோலவே யதிகளின் முன்னும்

எவன் இராமகீதையினைப் படிக்கின்றானோ, அவன் எதனை வாயினால் சொல்ல முடியாதோ அத்தன்மைய பயனை யடைகின்றான். (௯)

रामगीतां पठन्भक्त्या यः श्राद्धे भोजयेद्द्विजान् ॥ १० ॥

तस्य ते पितरः सर्वे यांति विष्णोः परं पदम् ।

எவன் ராமகீதையைப் பக்தியோடு படித்துச் சிராத்தத்தில் பிராஹ்மணர்களைப் புசிப்பிக்கின்றானோ, அவனுடைய அப்பிதிரர் யாவரும் விஷ்ணுவின் பரமபதத்தை அடைகின்றனர். (௧௦)

एकादश्यां निराहारो नियतो द्वादशीदिने ॥ ११ ॥

स्थित्वागस्त्यतरोर्मूले रामगीतां पठेत्तु यः ।

स एव राघवः साक्षात्सर्वदेवैश्च पूज्यते ॥ १२ ॥

எவன் ஏகாதசிதினத்தில் உணவில்லாதவனும், துவாதசியில் நியமமுடையவனுமாய் அகத்திவிருக்ஷத்தின் அடியிலிருந்து ராமகீதையினைப் படிக்கின்றானோ, அவனே சாக்ஷாத் இராகவன்; சர்வதேவர்களாலும் பூசிக்கப்படுகிறான். (௧௧)

विना ज्ञानं विना ध्यानं विना तीर्थावगाहनम् ।

रामगीतां नरोऽधीत्य तदनन्तफलं लभेत् ॥ १३ ॥

ஞானமில்லாமலும், தியானமில்லாமலும்; தீர்த்தத்தில் மூழ்குதலில்லாமலும், ராமகீதையினைப் படித்து நரன் அநந்த பயனை யடைகின்றான். (௧௨)

बहुना किमिहोक्तेन शृणु नारद तत्त्वतः ।
यस्य विज्ञानमात्रेण वाञ्छितार्थफलं लभेत् ॥

வெகுவாய்ச் சொல்லுவததனாலென்ன? நாரதரே! கேளும். இதனை யறிதல்மாத்திரத்தால் விரும்பிய பயனை அடைகின்றான். (௧௩)

பிரஹ்மாண்டபுராணத்தின் உத்திரகாண்டத்துள்ள,

ஸ்ரீ ராமகீதாமாகாத்மியம்

முடிந்தது.

---

உ

ஸ்ரீ கணேசாய நம:

# ஸ்ரீ ராமகீதை.

## உரைமங்கலம்.

### விநாயகர் ஸ்துதி.

ஐங்கர னற்று ளடைந்தவர்க ளெஞ்ஞான்றும்
பங்கமில ராவர் பரிந்து.

### ஆசார்யஸ்துதி.

பங்கயா தனனே யாதிப் பலரொடும் புவியிற் றோன்றி
யிங்குள மதங்கள் யாவு மெழில்பெறு தடக்கி மேலாப்
பொங்குவை திகமே யென்றும் பொலிவுறச் செய்த சீரோன்
சங்கர பகவற் பாதன் சர்வஞ்ஞ னடிகள் போற்றி.

### ஸ்ரீ இராமர்ஸ்திதியும் நூலின்பிரதிஞ்ஞையும்.

பங்கயன் முதலாந் தேவர் பன்முனி வரரி ரப்ப
விங்குளார் குறைக டீர்ப்பா னிரவியின் குலத்து வந்த
நங்குல தெய்வ ராம னளினமெய்ப் பதத்திற் றாழ்ந்து
துங்கமா மிராம கீதை சொல்லுவன் றமிழி லின்றே.

## நூல்.

महादेव उवाचः—

ततो जगन्मङ्गलमङ्गलात्मना विधाय रामायणकीर्तिमुत्तमाम् ।
चचार पूर्वाचरितं रघूत्तमो राजर्षिवर्यैरभिसेवितं यथा ॥ १ ॥

(அ-கை.) இனிப் பகவானாகிய சிவபிரான் உலககாரண பரமவித்தியாசொரூப சிதாநந்தலகரிவடிவ உமாதேவியாருக்கு ராமலக்ஷ்மணசம்வாதமுகமாகப் பரதத்துவத்தை உபதேசிக்கத் திருவாய்மலர்ந்தருளுகின்றார்:—

महादेवः उवाच । रघूत्तमः जगन्मंगलमंगलात्मना उत्तमां रामायणकीर्तिं विधाय ततः पूर्वाचरितं राजर्षिवर्यैः अपि यथा सेवितं चचार ॥

(இதன்பொருள்) மகாதேவர் சொல்லலாயினார்:—ஸ்ரீரகுகுலோத்தமர் உலகமங்கலமங்கலவடிவத்தால் உத்தமமான ராமாயணகீர்த்தியைச்செய்து, அதன்(சீதையைக்காட்டிற்கனுப்பிய)பின் தன் வம்சத்திற்றோன்றிய முன்னோர்களால் *ஆசரிக்கப்பட்டனவாய் † மற்றையராஜரிஷிசிரேஷ்டர்களாலும் எவ்வாறு அனுஷ்டிக்கப்பட்டனவோ அவ்வாறு (பிரஜாபாலனாதிசற்கருமங்களைச்) செய்து வந்தார். (எ-று)

---

* முன்னோர்களால் ஆசரிக்கப்பட்டவை குடிகளைக்காத்தல் நற்கதைகேட்டல்முதலிய நற்கருமங்கள்.

† ஜனகாதி இராஜரிஷிசிரேஷ்டர்களாலும்.

உலகமங்கலமங்கலவடிவத்தால் என்பதற்கு "तस्यैवानन्दस्यान्यानि मात्रामुपजीवन्ति ॥ அந்தப் பிரஹ்மாநந்தத்தின் இலேசத்தைக் கொண்டே மற்றெல்லோரும் ‡ ஜீவிக்கின்றூர்கள்." என்னும் சுருதியினாலும், मंगलानां मंगलम् । மங்கலங்களுக்கெல்லாம் மங்கலம்" என்னும் ஸ்மிருதியினாலும், உலகத்தின் மங்கலங்களாகிய ஆநந்தங் (சம்ஸாரசுகங்) கட்கெல்லாம் ஆதாரவடிவமான மங்கலம் அதாவது பிரஹ்மாநந்தம் எதுவோ அதேவடிவ(சொரூப)த்தால் என்றும், உலகத்தின் மங்கலம்(கல்யாணம்) எதனினின்று முண்டாகின்றதோ, அத்தன்மையமங்கலவடிவத்தால் அதாவது கல்யாணமூர்த்தியினால் என்றும் பொருளாம்.

வால்மீகிமுதலியோராற் செய்யப்பட்ட நாநாவித ராமாயணங்களின் பிரவிருத்திக்குக் காரணமான ராவணவத §முதலியவற்றா லுண்டாகிய கீர்த்தியானது, கேட்பவர்கட்கு ¶ மோக்ஷத்தைத் தருவதா யிருத்தலின் உத்தமமான ராமாயணகீர்த்தி யென்றார். (க)

---

‡ ஆநந்திக்கின்றூர்கள்.

§ முதலியவென்பதனால் லோகாபவாதத்தை முன்னிட்டுச் சீதையை விலக்கியதுமுதலியனவும் கொள்ளப்படும்.

¶ இக்கீர்த்தியானது சச்சிதாநந்தவிக்கிரகமாயுள்ள ஸ்ரீமந்நாராயணனுடைய லீலாவிபூதியா யிருத்தலாலும், தர்மரூபமா யிருத்தலாலும் மோக்ஷத்தைத் தருவதாகின்றது.

सौमित्रिणा पृष्ट उदारबुद्धिना रामः कथाः प्राह पुरातनीः शुभाः ।
राज्ञः प्रमत्तस्य नृगस्य शापतो द्विजस्य तिर्यक्त्वमथाह राघवः॥२॥

उदारबुद्धिना सौमित्रिणा पृष्टः रामः पुरातनीः शुभाः कथाः प्राह अथ राघवः प्रमत्तस्य नृगस्य राज्ञः द्विजस्य शापतः तिर्यक्त्वं आह ॥

(இ-ள்) உதாரபுத்தியுடையவரும் சுமித்திரையின் புத்திரருமாகிய லக்ஷ்மணராற் கேட்கப்பட்டவரான ராமசந்திரமூர்த்தி *பழைமையான மங்கலவடிவ கதைகளைச் சொன்னார். பின் ராகவர் தவறின நிருகராஜனுக்குப் பிராஹ்மணனுடைய சாபத்தினால் † திரியக்குயோனி வாய்த்ததனைக் கூறினார். (எ-று)

குருவேதாந்தவாக்கியத்தும் தெய்வத்தினிடத்து முண்டாகும் விசுவாசலக்ஷணமான குணமுடைய அல்லது தானதயாசீலமுள்ள புத்தியையுடையவராகலின் உதாரபுத்தி யென்றார். தர்மாதர்மங்களை நிச்சயிப்பனவாயிருத்தலின் மங்கலவடிவகதைக ளென்றார்.

முற்காலத்தில் மிக்க தர்மாத்மாவான நிருகனென்னும் ஓர் அரசனிருந்தான். அவன் தினந்தோறும் பிராஹ்மணர்களுக்கு அநேக கோதானங்களைச் செய்துகொண்

---

* பழயராஜாக்களின் சம்பந்தமுள்ள.

† திரியக்கு=பசுபக்ஷி முதலியன. யோனி=பிறப்பிடம்.

டிருந்தான். அவனுடைய பசுமந்தையில் ஓர் பிராஹ்மணரது பசு தெரியாது வந்து சேர்ந்துவிட்டது. இவ்விஷயம் இராஜனுக்குத் தெரியாதாகலின் அவன் அதனை மற்றப் பசுக்களோடு சேர்த்துத் தானம் கொடுத்துவிட்டான். இதனை அப்பசுவினுக்குரிய பிராஹ்மணர் கேட்டு நிருகராஜனைச் சபித்து விட்டார். சபிக்கவே நிருகராஜன் தர்மாத்மாவா யிருந்தும் அறியாமற்செய்த பிராஹ்மணசொத்தின் அபகாரத்தினால் திரியக்குயோனியை அதாவது ஓணான் ஜன்மத்தை அடைய நேர்ந்தது. இதனால் எவ்வகையாலும் பிராஹ்மணசொத்தில் வேற்றுமுகமா யிருத்தலே தர்மமென்பதும், வேதவிருத்தமான புண்ணியமும் பாபத்திற்குச் சமானமேயா மென்பதும் சூசிப்பிக்கப்பட்டது. (உ)

कदाचिदेकान्त उपस्थितं प्रभुं रामं रमालालितपादपङ्कजम् ।
सौमित्रिरासादितशुद्धभावनः प्रणम्य भक्त्या विनयान्वितोऽब्रवीत् ॥३॥

कदाचित् आसादितशुद्धभावनः सौमित्रिः एकान्ते उपस्थितम् प्रभुम् रमालालितपादपङ्कजम् रामम् भक्त्या प्रणम्य विनयान्वितः (सन्) अब्रवीत् ॥

(இ-ள்) ஒருசமயம் சுத்தபாவனையடைந்த லக்ஷ்மணர் *ஏகாந்தத்தி லிருப்பவரும், †பிரபுவும், லக்ஷ்மியினால்

---

* ஜனங்களில்லாத தனி இடம். † எல்லாம்வல்லவர்.

ஸேவிக்கப்படும் பாதகமலங்களையுடையவருமான ராம சந்திரமூர்த்தியைப் ‡ பக்தியோடு வணங்கி விநயத்தோடு கூடியவராய்த் (உலகரக்ஷணையின்பொருட்டுத்) தெரிவிக்க லாயினார். (எ-று)

இதனால் குருவைச் சரணடையும் கிரமம் சொல்லப் பட்டது.

முன் கூறப்பட்ட அநேகவிதமான கதைகளைக் கேட் டதனாலும், அந்தப்படி நடந்ததனாலும் சுத்தமடைந்த சித்த முடையவரா யிருந்தமையால் சுத்தபாவனையடைந்த லக்ஷ் மண ரென்றார். (௩)

त्वं शुद्धबोधोऽसि हि सर्वदेहिनामात्माऽस्यधीशोऽसि निराकृतिः स्वयम्।
प्रतीयसे ज्ञानदृशां महामते पादाब्जभृङ्गाहितसंगसंगिनाम् ॥ ४ ॥

महामते त्वम् शुद्धबोधः असि सर्वदेहिनां आत्मा असि अधीशः असि निराकृतिः पादाब्जभृङ्गाहितसङ्गसङ्गिनाम् ज्ञानदृशाम् स्वयं प्रतीयसे ॥

(இ-ள்) மகாமதியே! தாம் சுத்தஞானசொரூபியா யிருக்கின்றீர்; சர்வதேகிகளின் ஆத்மாவா யிருக்கின்றீர்; நியந்தாவா யிருக்கின்றீர்; வடிவமில்லாதவரா யிருக்கின்றீர்.

‡ இவர் குரு என்னும் புத்தியோடு,

(அப்படியிருந்தும்) தமது பாததாமரைகளில் வண்டுகளைப் போல் பிரியம்வைத்துள்ள சித்தமுடையவர்களாகிய ஞான திருஷ்டியுடையோருக்கு நீர் தூரமாக(வலிய)த் தோற்றுகின்றீர். (எ-று)

எல்லாவற்றையும் அறியும் பெருமதியுடையவரா யிருத்தலின் மகாமதியே யென்றழைத்தனர்.

* அநவச்சின்னசைதன்னியவடிவமா யிருத்தலின் சுத்தஞானசொரூபி யென்றார்.

ஜீவர்களெல்லாம் அச்சைதன்னியத்தின் பிரதிபிம்பமா யிருத்தலின் சர்வதேகிகளின் ஆத்மா வென்றார்.

எல்லாஜீவர்களுள்ளு மிருந்து இயக்குகின்றமையால் நியந்தா(அதீசன்) என்றார்.

வாஸ்தவபேத மின்மையால் சர்வாத்மத்தன்மையும், † உபாதியினாலாகிய பேதத்தினால் ‡ நியந்திருநியாமியத் தன்மையும் அறியத்தக்கனவாம்.

---

* வேறுபிரித்தறியப்படாத.

† தனது ஆசிரயத்தின் சொரூபத்தில் பிரவேசியாது அதனைப் பிறவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பது உபாதி யெனப்படும்.

‡ நியந்திரு=நடத்துவோன். நியாமியம்=நடத்தப்படுவது.

நம்மனோர்களைப்போல் தன்னாற் சம்பாதிக்கப்பட்ட கர்மாதீனமான சரீரவடிவமில்லாதவ ராகலின் வடிவமில்லாதவ ரென்றார்.

பாதகமலங்களில் பிரியம்வைத்துள்ள ஞானதிருஷ்டியுடையவருக்கு வலியத் தோற்றுகின்று யென்றமையால் பாதகமலப்பிரீதியாகிய பக்தியுள்ளோருக்கே ஞானதிருஷ்டி யுண்டா மென்பதும், ஞானதிருஷ்டி யின்றி வேறெவ்வகையாலும் ஆத்மாராமன் பிரத்தியக்ஷமாகா னென்பதும் பெறப்படுகின்றது. (ச)

अहं प्रपन्नोऽस्मि पदाम्बुजं प्रभो भवापवर्गं तव योगिभावितम् ।
यथांजसा ज्ञानमपारवारिधिं सुखं तरिष्यामि तथानुशाधि माम् ॥ ५ ॥

प्रभो अहम् योगिभावितम् भवापवर्गम् तव पदाम्बुजम् प्रपन्नः अस्मि । यथा अञ्जसा अपारवारिधिम् अज्ञानम् सुखं तरिष्यामि तथा माम् अनुसाधि ॥

(இ-ள்) பிரபுவே! யான் யோகிகளால் பாவிக்கப்படுவதும் சம்சாரத்தை நீக்குவிப்பதுமான தம்முடைய பாதபங்கயத்தைச் சரணடைந்தவனா யிருக்கின்றேன். எவ்வாறு விரைவில் அபார(கரையின்றிய) சமுத்திரவடிவ அஞ்ஞானத்தைச் சுகமாக(வருத்தமின்றி)க் கடப்பேனோ, அவ்வாறு எனக்கு உபதேசஞ்செய்தருளல்வேண்டும். (எ-று)

யோகிகளால் பாவிக்கப்படுவது என்றதனால் அது (பாதபங்கயம்)சம்சாரத்தை நீக்குவதா மென்பதில் சதாசா ரம் (ஆன்றோரொழுக்கம்) பிரமாணமா மென்பது கூறப்பட் டது.

பாரமு(கரையு)ள்ள சமுத்திரத்தினும் வேறுபட்டது என்பது தோன்ற அபாரசமுத்திரவடிவம் என்றார். இத னால் கடத்தற்கரியதன்மை துவனிக்கின்றது.

அஞ்ஞானமே சம்ஸாரத்திற்கு மூலகாரணமாகையால் அதனைக் கடத்தற் குபாயங் கேட்டார். (௫)

श्रुत्वाऽथ सौमित्रिवचोऽखिलं तदा प्राह प्रपन्नार्तिहरः प्रसन्नधीः ।
विज्ञानमज्ञानतमोपशान्तये श्रुतिप्रपन्नं क्षितिपालभूषणः ॥ ६ ॥

अथ सौमित्रिवचः अखिलम् श्रुत्वा प्रसन्नधीः तदा प्रपन्नार्तिहरः क्षितिपालभूषणः अज्ञानतमोप्रशान्तये श्रुतिप्रपन्नम् विज्ञानम् प्राह ॥

(இ-ள்) பின் இலக்ஷ்மணர்வாக்கியமுழுவதையும் கேட்டுப் பிரசன்னமனதுடையவராய், அப்பொழுது சர ணம்புகுந்தவர்துயர்கெடுப்பவரும் அரசர்கட் கணியான வருமான ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி அஞ்ஞானவிருள் கெடும் பொருட்டுச் சுருதிகளா லறிவிக்கப்படும் விஞ்ஞான(ஆத் மதத்துவஞான)த்தினைக் கூறுவாராயினர். (எ-று)

"तमेव विदित्वातिमृत्युमेति नान्यः पंथा विमुक्तये ॥ அவ்வாத்மாவினை அறிந்தே மிருத்தியுவைக் கடக்கின்றான். மோக்ஷத்திற்கு இதனைவிட வேறுவழியில்லை.'' என்னு மிவை*முதலிய சுருதிகளால் அப்பயனுடையதா யறிவிக்கப்படுவதாயிருத்தலின் சுருதிகளா லறிவிக்கப்படும் விஞ்ஞான மென்றார். (௬)

आदौ स्ववर्णाश्रमवर्णिताः क्रियाः कृत्वा समासादितशुद्धमानसः।
समाप्य तत्पूर्वमुपात्तसाधनः समाश्रयेत्सद्गुरुमात्मलब्धये ॥ ७ ॥

(அ-கை) இப்போது அத்தன்மைய ஞானப்பிராப்தியின்பொருட்டுக் கிரமமாகப் † பகிரங்க அந்தரங்கசாதனங்களைக் கூறுகின்றார் :—

आदौ स्ववर्णाश्रमवर्णिताः क्रियाः कृत्वा समासादितशुद्धमानसः तत्पूर्वम् उपात्तसाधनः (सन्) (तत्) समाप्य आत्मलब्धये सद्गुरुं समाश्रयेत् ॥

(இ-ள்) புருஷன் முதலில் தன் வர்ணத்திற்கும் ஆசிரமத்திற்கும் சாஸ்திரங்களாற் சொல்லப்பட்டுள்ள ‡கிரியைகளைச் செய்து அதனாற் சம்பாதிக்கப்பட்ட சுத்தமன

* முதலிய என்றதனால் மற்றும் அநேகசுருதிகளுண்டு. அவற்றை ஸ்ரீவிசாரசந்திரோதயத்தின் டிப்பணியில் காண்க.

† யஞ்ஞாதிகள் பகிரங்கசாதனம்; விவேகாதிகள் அந்தரங்கசாதனம்.

‡ நித்தியநைமித்திகாதி.

தையுடையவனாய், அக்கர்மாநுஷ்டானபூர்வகமாகச் சம்பாதிக்கப்பட்ட *சாதனங்களை யுடையவனாய்,(அக்கர்மத்தினை) முடித்து(விட்டு)ஆத்மஞானத்தின் பொருட்டுச் சற்குருவைச் செவ்வையாய் ஆசிரயிக்கக்கடவன். (எ-று)

இதனால் கர்மங்கட்குப் பகிரங்கத்துவமும், விவேகாதிகட்கு அந்தரங்கத்துவமும் வெளிப்படையாகச் சொல்லப்பட்டன. அன்றியும் விவேகவைராக்கியாதிகள் இடமாகும்வரையில் கர்மம் அநுஷ்டிக்கத்தக்கதா மென்பதும், குருவின்றித் தானாகச் செய்யும் வாக்கியவிசாரத்தினால் பயனில்லை யென்பதும் சூசிப்பிக்கப்பட்டது. (எ)

क्रिया शरीरोद्भवहेतुरादृता प्रियाप्रियौ तौ भवतः सुरागिणः ।
धर्मेतरौ तत्र पुनः शरीरकं पुनः क्रिया चक्रवदीर्यते भवः ॥ ८ ॥

(அ-கை) சம்சாரம் சுழல்தலுடைய சக்கரவடிவமாயிருத்தலாலும், அதன் நிவிருத்தியும் தன்காரணமான அஞ்ஞானத்தின் நிவிருத்தியைக் காரணமாகவுடையதா யிருத்தலாலும், அஞ்ஞானநிவிருத்தியும் தத்துவஞான மொன்றினாலேயே சாதிக்கப்படுவதா யிருத்தலாலும், தத்துவஞானமும் வேதாந்தவிசாரத்தாற் சாதிக்கப்படுவதா யிருத்தலாலும், அதன் (விசாரத்தின்)பொருட்டுக் குருவனை ஆசிரயிக்கவேண்டு மென்று கூறுகின்றார்:—

* விவேகாதி.

आदृता क्रिया शरीरोद्भवहेतुः (तत्र) सुरागिणः तौ धर्मेतरौ प्रियाप्रियौ भवतः तत्र पुनः शरीरकम् पुनः क्रिया (एवम्) भवः चक्रवत् ईर्यते ॥

(இ-ள்) ஆதரவோடு (முன்பிறப்புக்களில்) சம்பாதிக்கப்பட்ட கிரியை இச்சரீரத்தின் பிறப்பிற்குக் காரணமாம். (அந்தப்பிறப்பில்) விஷயாபிலாஷையுடையவனுக்கு அந்த (சாஸ்திரப்பிரசித்தமான) தர்மாதர்ம(புண்ணியபாவ)ங்கள் பிரியாப்பிரியங்களா (சுகதுக்கங்களைத் தருவனவா) யிருக்கின்றன. அங்கு மறுபடியும் சரீரம், மறுபடியும் கிரியை. (இவ்வாறு) சம்ஸாரம் சக்கரம்போல் சொல்லப்படுகின்றது. (எ-று)

சக்கரம் சுற்றப்பட்டதாய் ஒருமுறை கீழும், ஒருமுறை மேலும், மறுபடியும் கீழும், மறுபடியும் மேலுமாகச் சுழல்வதுபோலப் பிறப்பும் கிரியையும் *ஜந்யஜநகத்தன்மையாகச் சுழன்றுகொண்டிருக்கின்றன வென்று அறியவேண்டும்.

தர்மாதர்மங்கள் பிரியாப்பிரியங்கள் என்பதனால் ஒருவனுக்கு அதர்மத்திலேயே சுகத்தன்மைப்புத்தியாற் பிரவிருத்தியும், ஒருவனுக்குத் தர்மத்தில் சுகத்தன்மைப்புத்தியாற் பிரவிருத்தியும் ஒருகாலத்தில் உண்டாகின்றனதென்பதும் ஊகிக்கத்தக்கதாம். (அ)

* ஜந்யம் = பெறப்படுவது. ஜநகம் = பெறுவது.

अज्ञानमेवास्य हि मूलकारणं तद्धानमेवात्र विधौ विधीयते ।
विद्यैव तन्नाशविधौ पटीयसी न कर्म तज्जं सविरोधमीरितम् ॥ ९ ॥

(அ-கை) அதற்கும் * அஞ்ஞானமே மூல மென்று கூறுகின்றார்:—

अस्य अज्ञानम् एव हि मूलकारणम् अत्रविधौ तद्धानम् एव विधीयते ॥

(இ-ள்) இச்சம்சாரத்திற்கு அஞ்ஞானமே மூல காரணம். இச்சம்சாரநிவிருத்திலக்ஷணமான கர்த்தவ்வியவிஷயத்தில் அதன் (அஞ்ஞானத்தின்) நீக்கமே (சாதனத்தன்மையாக) விதிக்கப்படுகின்றது. (எ-று)

(அ-கை) அப்படியானால் கர்மமே அதனைக் கெடுப்பதாகுக. ஞானத்தினால் என்னை? என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

विद्या एव तन्नाशविधौ पटीयसी कर्म न । तज्जं ॥

(இ-ள்) ஞானமே அதனை (மூலாஞ்ஞானத்தினை)க் கெடுப்பதில் சாமர்த்தியமுடையதாம்; கர்ம மன்று; (கர்மம்) அதனின்று முண்டானதா யிருத்தலின்.

ஆத்மசொரூபாஞ்ஞானத்தாற் றோன்றிய தேகாதிய

* "अज्ञानात्प्रभवं सर्वं ॥ எல்லாம் அஞ்ஞானத்தினின்று முண்டாயினவாம்," என்பது சுருதி.

பிமானத்தாற் பிறந்த தர்மமா யிருத்தலின் கர்மம் அஞ் ஞானஜந்யமென் றறியத்தக்கதாம்.

(அ-கை) அப்படியானால் அதனினுண்டாகியதற் கும் அதனைக் கெடுக்குந்தன்மை தேள் நண்டுமுதலியவற் றில் காணப்படுகின்றதே யென்றாசங்கித்து, அதனினின் று முண்டாகியது அதனைக் கெடுப்பதற்குக் காரணமாகாது; விரோதமுடையதே காரணமா மென்று கூறுகின்றார் :—

सविरोधम् ईरितम् ॥

(இ-ள்) விரோதமுடையது (நாசகமென்று) சொல் லப்படுகின்றது.

இதனால் அஞ்ஞானத்திற்கு விரோதியான ஞானத்தி னாலே அது கெடு மென்பது சித்தித்தது. (௯)

नाज्ञानहानिर्न च रागसंक्षयो भवेत्ततः कर्म सदोषमुद्भवेत् ।
ततः पुनः संसृतिरप्यवारिता तस्माद्बुधो ज्ञानविचारवान्भवेत् ॥१०॥

(அ-கை) இதனாற்றான் கர்மங்கட்கு அஞ்ஞானத்தி னாற் கேடில்லை யென்று கூறுகின்றார் :—

ततः न अज्ञानहानिः न च रागसंक्षयः भवेत् कर्म सदोषम् उद्भवेत् ततः पुनः अपि अवारिता संसृतिः तस्मात् बुधः ज्ञान-विचारवान् भवेत् ॥

(இ-ள்) அக்கர்மத்தினுல் அஞ்ஞானம் கெடுகிற தில்லை; இச்சையும் ஒழிகிறதில்லை. தோஷமுடைய கர்மமே யுண்டாகின்றது. அதனின்றும் மறுபடியும் நீக்கப் படாத சம்சார முண்டாகின்றது. ஆதலால் விவேகி ஞான விசாரமுடையவ ஞகுக.

நாசமாகும் பயனுடைமைமுதலிய தோஷத்தோடு கூடியதா யிருத்தலின் தோஷமுடைய கர்ம மென்ருர்.

கர்மத்தினுல் சம்சார முண்டாகின்ற தென்றமையால் அதனுல் முக்தியுண்டாகு மெனும் ஆசை வைக்கவேண்டிய தில்லை யென்பது பொருள்.

இங்கு ज्ञायतेऽनेनेति ज्ञानम् ॥ இதனுல் அறியப்படுகின்ற மையால் ஞானம் (அறிவு) என்னும் விற்பத்தியால் வேதாந் தவாக்கியம் ஞான மெனப்பட்டது. (கo)

ननु क्रिया वेदमुखेन चोदिता यथैव विद्या पुरुषार्थसाधनम् ।
कर्तव्यता प्राणभृतः प्रचोदिता विद्यासहायत्वमुपैति सा पुनः॥ ११ ॥

(அ-கை) இப்போது ஞானமே மோக்ஷகாரண மென்று சொல்லுவதற்கு ஞானகர்ம * சமுச்சயவாதத்தினைத் தூஷணத்தின்பொருட்டு ஒன்றரைச்சுலோகத்தினுல் கூறுகின்ருர் :—

* ஒரேகாலத்தில் ஞானமும் கர்மமும் கலந்து மோக்ஷசாதனமா மென்று கூறுவதனைச் சமுச்சயவாத மென்பர்.

ननु वेदमुखेन चोदिता क्रिया यथा एव विद्या पुरुषार्थसाधनं प्राणभृतः कर्तव्यता प्रचोदिता सा पुनः विद्यासहायत्वम् उपैति ॥

(இ-ள்) அப்படியானால் வேதத்தின் வாயால் சொல்லப்பட்ட கிரியை ஞானத்தினைப் போலவே மோக்ஷசாதனமாகப் பிராணிகளுக்கு அவசியம் செய்யத்தக்கதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் அது மறுபடியும் ஞானத்திற்குச் சகாயமாதலை யடைகின்றது. (எ-று)

"ब्रह्मविदाप्नोति परम् । பிரஹ்மஞானி பர(மோக்ஷ)த்தை அடைகிறான்" என்பன முதலியவற்றால் வேதத்தின் முகத்தினாலேயே ஞானம் பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷத்தின் சாதனமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. அதுபோலவே "उभाभ्यामेव पक्षाभ्यां यथा खे पक्षिणां गतिः । तथैव ज्ञानकर्मभ्यां प्राप्यते ब्रह्म शाश्वतम् ॥ எப்படி ஆகாயத்தில் பக்ஷிகள் இரண்டு இறகுகளினாலும் பறக்குமோ (ஒன்றினால் பறக்காதோ) அதுபோல ஞானகர்ம மிரண்டினாலும் சாசுவதமான (பழைமையான) பிரஹ்மம் அடையப்படுகின்றது." என்னும் இவைமுதலிய வாக்கியங்களின் வாயிலாக ஞானத்தோடு கிரியைக்கும் மோக்ஷத்திற்குச் சாதனமாந்தன்மை வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் நித்தியநைமித்திககர்மங்கள் அவசியம் செய்யத்தக்கனவாம். அவற்றைச் செய்யாதபோது பிரத்தியவாய(தோஷ) முண்டாதலால் ஞானேற்

பத்தியே யுண்டாகாது. ஆதலால் அந்தக் கிரியை மறு படியும் கடவுற்பத்திக்குத் தண்டசக்கிராதிகள் சகாயமா வதுபோல ஞானத்திற்குச் சகாயமாகின்றது. அதனால் ஞானமும் கிரியையும் கலந்தே செய்யத்தக்கனவா மென் பது பூர்வபக்ஷியின் அபிப்பிராயம். (கக)

कर्माकृतौ दोषमपि श्रुतिर्जगौ तस्मात्सदा कार्यमिदं मुमुक्षुणा ।
ननु स्वतंत्रा ध्रुवकार्यकारिणी विद्या न किंचिन्मनसाऽप्यपेक्षते ॥१२॥

(அ-கை) பூர்வபக்ஷி அவசியம் செய்யத்தக்கதா மென்று தான் கூறியதனையே விவரிக்கின்றான்:—

कर्माकृतौ दोषम् अपि श्रुतिः जगौ तस्मात् सदा इदम् मुमुक्षुणा कार्यम् ॥

(இ-ள்) கர்மம் செய்யாதபோது தோஷத்தையும் சுருதி கூறுகின்றது. ஆதலால் இது எப்பொழுதும் முமுக்ஷுவால் செய்யத்தக்கதாம். (எ-று)

"वीरहा वा एष देवानां योग्निमुद्वासयते । यावज्जीवमग्निहोत्रं जुहोति ॥ எவன் அக்கினிஹோத்திரத்தை விடுகின்றானோ அவன் இந் திரனைக் கொன்ற தோஷ மடைவன். ஆதலால் ஜீவித்திருக்

கும்வரையில் அக்கினிஹோத்திரம் செய்யவேண்டும்." என்பது சுருதி.

(அ-கை.) அதில் சித்தாந்தி சங்கிக்கின்றார் :—

ननु स्वतन्त्रा ध्रुवकार्यकारिणी विद्या किंचित् मनसा अपि न अपेक्षते ॥

(இ-ள்) நிச்சயமாக சுவதந்திரமுள்ளதும் நிலையான காரியத்தை யுண்டுபண்ணுவதுமான வித்தை (ஞானம்) ஒன்றனை மனதினாலும் அபேக்ஷிக்கிறதில்லை. எனின், (எ-று)

பிரகாசம் ஒன்றன் அபேக்ஷையின்றிச் சுவதந்திரமா (தன்வசத்ததா)கவே இருளைப்போக்குவதுபோல வித்தை மற்றொன்றன் அபேக்ஷையின்றி அஞ்ஞானத்தைக் கெடுத்து மோக்ஷத்தை யுண்டுபண்ணுவதில் சாமர்த்தியமுள்ளதாமென்பது கருத்து.

இதனால் "ஞானம் பயனை யுண்டுபண்ணுவதில் மற்றொன்றனை யபேக்ஷியாததாம்; சுவதந்திரமா யிருத்தலால்; ஒளியினைப்போல." என்னும் அநுமானம் சூசிப்பிக்கப்பட்டது. (௧உ)

न सत्यकार्योऽपि हि यद्वदध्वरः प्रकांक्षतेऽन्यानपि कारकादिकान् ।
तथैव विद्याविधितः प्रकाशितैर्विशिष्यते कर्मभिरेव मुक्तये ॥ १२ ॥

(அ-கை.) சமுச்சயவாதி பரிகரிக்கின்றான்:—

न हि यद्वत् सत्यकार्यः अपि अध्वरः अन्यान् कारकादिकान् अपि प्रकांक्षते तथा एव विद्या विधितः प्रकाशितैः कर्मभिः एव मुक्तये विशिष्यते ॥

(இ-ள்) (தாம் கூறியபடி) அன்று. எப்படிச் சத்திய(நிலையான)காரிய முடையதாயினும், யாகம் அந்நியமான * காரகமுதலியவற்றையும் அபேக்ஷிக்கின்றதோ, அப்படியே வித்தையும் விதிவாக்கியங்களால் வெளிப்படுத்தப்பட்ட கர்மங்களோடுகூடியே முக்தியின்பொருட்டுச் சாமர்த்திய முடையதாகும். (எ-று)

"வித்தை பயனைத்தருவதில் கர்மாபேக்ஷையுடையதாம்; † அங்கியா யிருத்தலால்; ‡ பிரயாஜ்யமுதலிய அங்காபேக்ஷையுடைய ¶ தரிசமுதலிய யாகங்களைப்போல." என்னும் $ சற்பிரதிபக்ஷாநுமானம் இதனால் சூசிப்பிக்கப்பட்டது.

---

* காரகம் = செய்விப்பவன்.

† அங்கமுடையது.

‡ யாகத்தின் ஓர் அங்கம்.

¶ தரிசம்-அமாவாசைமுதல் தொடங்கும் யாகவிசேஷம்.

$ சற்பிரதிபக்ஷம்-இதனைத் தருக்ககௌமுதியில் காண்க.

"सत्यकार्य: अक्षय्यं ह वै चातुर्मास्ययाजिनः सुकृतं भवति சாதுர் மாசயாகஞ் செய்யும் புண்ணியவான்களுக்கு அழிவற்ற பயன் உண்டாகின்றது." என்னும் சுருதியின் வலியால் சத்தியகாரிய முடையதாயினும் என்றார்.

"अग्निहोत्रं जुहोति அக்கினிஹோத்திரம் செய்யக்கடவன்." என்றல் முதலிய சுருதிகள் விதிவாக்கியங்களாம். (கஈ)

केचिद्वदन्तीति वितर्कवादिनस्तदप्यसद्दृष्टविरोधकारणात् ।
देहाभिमानादभिवर्धते क्रिया विद्या गताहंकृतितः प्रसिद्ध्यति॥१४॥

(அ-கை.) அதனை மறுத்துச் சித்தாந்தி தூஷிக்கின்றார் :—

इति केचित् वितर्कवादिनः वदन्ति तत् अपि असत् दृष्टविरोध-कारणात् ॥

(இ-ள்.) இவ்வாறு சில விதர்க்கவாதிகள் கூறுகின்றனர். அதுவும் அசத்தாம்; (உலகத்தினர் எல்லோராலும்) காணப்படும் விரோதவடிவ காரணமுடையதாயிருத்தலின். (எ-று)

கர்மமாத்திரம் மோக்ஷசாதன மென்ப தசத்தாவது போல அது (கர்மம்) கூடியதும் மோக்ஷசாதனமெனல் அசத்தா மென்பார் அதுவும் அசத்தா மென்றார்.

(அ-கை.) அவ்விரோதத்தினையே கூறுகின்றார் :—

क्रिया देहाभिमानात् अभिवर्द्धते विद्या गताहंकृतिनः प्रसिद्ध्यति ॥

(இ-ள்.) கிரியை தேகாபிமானத்தால் விருத்தியாகின்றது. வித்தை அகங்கார மொழிந்தவர்களுக்குப் பிரசித்தியாகின்றது. (எ-று)

அகங்காரசத்தையை மூலமாகவுடைமையால் கிரியை ஞானங்களின் சமுச்சயம் விரோதமுடையதா மென்பது பொருள். (கச)

विशुद्धविज्ञानविरोचनाञ्चिता विद्यात्मवृत्तिश्चरमेति भण्यते ।
उदेति कर्माखिलकारकादिभिर्निहन्ति विद्याऽखिलकारकादिकम् ॥१५॥

(இ-ள்.) இனிப் பூர்வபக்ஷி கூறிய அநுமானத்தினைத் தூஷிக்கின்றவராய் வித்தையின் சொரூபத்தினைக் கூறுகின்றார் :—

विशुद्धविज्ञानविरोचनाञ्चिता चरमा आत्मवृत्तिः विद्या इति भण्यते ॥

(இ-ள்.) நிர்மலமான விஞ்ஞான (ஆத்மஞான)த்தினையுண்டுபண்ணும் வேதாந்தவாக்கியங்களின் விசாரத்தினால் அடையப்பட்ட சரம (கடைசியான) ஆத்மவிருத்தி வித்தையென்று (சத்துக்களால்) சொல்லப்படுகின்றது. (எ-று)

இங்கு விஞ்ஞானத்தினை யுண்டுபண்ணும் வேதாந்த வாக்கியங்கள் விஞ்ஞான மென்று சொல்லப்பட்டது இலக்ஷணையினாலாம்.

பிரஹ்மாகாரமான அந்தக்கரணவிருத்தி வந்தவுடனே அவித்தை நஷ்டமாதலால் அதன் பின் வேறுவடிவ விருத்தி யுண்டாதற் கிடமில்லை யாகலின், அவ்வாத்மவிருத்தியினைச் சரமவிருத்தி யென்றார். இதனால்தான் இதனைப் பரஞான மென்பர்.

(அ-கை.) மறுபடியும் சமுச்சயத்தினை நீக்குதற் பொருட்டு வித்தைக்கும் கர்மத்திற்கு முள்ள வேற்றுமையைக் கூறுகின்றார் :—

कर्म अखिलकारकादिभिः उदेति विद्या अखिलकारकादिकम् निहन्ति ॥

(இ-ள்.) (யஞ்ஞாதி) கர்மம் சகல * காரகமுதலியவற்றாலும் † உதயமாகின்றது. ஞானம் சகல ‡ காரக முதலியவற்றையும் கெடுக்கின்றது. (எ-று)

எல்லா வியாபாரங்களையும் விடுதலால் பிரஹ்மத்தில் முடிவுபெறுதலே வித்தையாம். அதனால் தனது (ஞானத்

* செய்யப்படுவது செய்வது முதலிய அங்கங்களாலும்.

† பயனுக் கெதிர்முக மாகின்றது.

‡ கர்த்திருத்வ முதலியவற்றையும்.

தின்) உற்பத்தியில் சித்தசுத்திவாயிலாகக் கர்மாபேக்ஷை யாம். தனது பயனை உண்டுபண்ணுந்தன்மையில் அக்கர் மத்தின் அபேக்ஷையின்மையேயாம். அப்படிக்கில்லையா யின், வித்தையின் சொரூபத்திற்கே பங்கம் வருமாகலின் என்பதனால் பூர்வபக்ஷி கூறிய ஏது சித்தியாததாம் என் பது கருத்து. (கரு)

तस्मात्त्यजेत्कार्यमशेषतः सुधीर्विद्याविरोधान्न समुच्चयो भवेत् !
आत्मानुसंधानपरायणः सदा निवृत्तसर्वेन्द्रियवृत्तिगोचरः ॥ १६ ॥

(அ-கை.) முற்கூறியதனை முடித்து முமுக்ஷுவினது விருத்தியின் றன்மையினைக் கூறுகின்றார் :—

विद्याविरोधात् समुच्चयः न भवेत् तस्मात् सुधीः अशेषतः कार्यम् त्यजेत् ॥

(இ-ள்.) வித்தைக்கு (கர்மத்தோடு) விரோத மிருத் தலால் சமுச்சயமுண்டாகாது. ஆதலால் நற்புத்தியுடை யோன்(முமுக்ஷு) செய்யத்தக்க கர்மத்தை அடியோடு விடவேண்டும். (எ-று)

காம்யகர்மம் முற்றும் விடவேண்டியதேயாம். நித்திய நைமித்திகமும் சித்தசுத்தி (மனத்தூய்மை) வருமளவும் செய்யத்தக்கனவேயாம் ; அதன் பின்னரும் பிரஹ்மத்தில்

சித்தம் நிலைபெறுமளவும் செய்யத்தக்கனவேயாம். அதன் பின் அப்பிரஹ்மாநுசந்தானத்திற்குத் தடையாயிருத்தலா லும் பிரயோஜனமின்மையாலும் அவைகளும் விடத்தக்கன வேயாமென்பது கருத்து.

(அ-கை.) இப்போது முமுக்ஷு செய்யவேண்டிய தனைக் கூறுகின்றார்:—

निवृत्तसर्वेन्द्रियवृत्तिगोचरः सदा आत्मानुसंधानपरायणः (भवेत्)॥

(இ-ள்.) எல்லா இந்திரியகோசர (சப்தாதி) விஷ யங்களினின்றும் நீங்கியவனாய் எப்போதும் * ஆத்மாநு சந்தானபராயணனா யிருக்கவேண்டும். (எ-று)

இங்கு இந்திரியப் † பிரத்தியாகாரம் செய்யவேண் டியதாகக் கூறப்பட்டது. அதனால் அதற்குமுன் ‡ பிரா

---

* ஆத்மசிந்தனையே தனக்குப் பரம அதாவது மேலான அயனம் அதாவது அடையப்படுபொருளாக வுடையவன் ஆத்மாநுசந்தான பராயணனாவன்.

† இந்திரியங்களைத் தத்தம் விஷயங்களினின்றும் இழுத்தல் பிரத்தியாகாரம்.

‡ சரீரத்தில் உசுவாசநிசுவாசம் செய்யும் வாயுவாகிய பிரா ணனை இரேசகபூரககும்பகக் கிரமத்தால் ஆயாமம் செய்தல் அதா வது தடுத்தல் பிராணாயாம மெனப்படும்.

ஞுயா $ மாதிகளும் செய்யவேண்டியனவா மென்பது பொருளாற் கிடைத்தது. (கசு)

यावच्छरीरादिषु माययाऽऽत्मधीस्तावद्विधेयो विधिवादकर्मणाम् ।
नेतीति वाक्यैरखिलं निषिध्य तज्ज्ञात्वा परात्मानमथ त्यजेत्क्रियाः॥ १७॥

(அ-கை.) * ராகிவிராகிபேதத்தால் கர்மங்கட்குக் கர்த்தவ்வியத்தன்மை யுண்டென்று கூறுகின்றார் :—

यावत् मायया शरीरादिषु आत्मधीः तावत् विधिवादकर्मणाम् विधेयः तत् अखिलं "न इति" इति वाक्यैः निषिध्य परात्मानम् ज्ञात्वा अथ क्रियाः त्यजेत् ॥

(இ-ள்) எதுவரையில் அஞ்ஞானத்தினுல் சரீரமுதலியவற்றில் ஆத்மபுத்தி (யான் கர்த்தா வென்னும் உணர்ச்சி) இருக்கின்றதோ, அதுவரையில் † விதிவாதகர்மங்கட்கு ‡ விதேய னாகின்றான். அவ்வெல்லாவற்றையும்

---

$ ஆதிசப்தத்தால் தாரணை தியானம் சமாதி என்பன கொள்ளப்படும்.

* ராகி = ஆசையுள்ளவன். விராகி = ஆசையொழிந்தவன்.

† விதி யாகஞ்செய்யக்கடவன் என்றல் முதலியன. வாதம் கர்த்திருத்தன்மையைப் போதிப்பது. இஃது எக்கர்மங்கட் குண்டோ அவை விதிவாதகர்மங்களாம்.

‡ விதிக்கு விஷயமாகுபவன் விதேயன்.

"* இத்தன்மையது அன்று" என்னும் வாக்கியங்களால் † நிஷேதித்துப் பரமாத்மாவை யறிந்து பின் கிரியைகளை விடவேண்டும். (கஎ)

यदा परात्मात्मविभेदभेदकं विज्ञानमात्मन्यवभाति भास्वरम् ।
तदैव माया प्रविलीयतेऽञ्जसा सकारका कारणमात्मसंसृतेः ॥ १८ ॥

(அ-கை.) ஆத்மவிஞ்ஞான முண்டானபோது அவசியம் அவித்தை நீங்குகின்றதென்று கூறுகின்றார் :—

यदा आत्मनि परमात्मात्मविभेदभेदकं भास्वरम् विज्ञानम् अवभाति तदा एव आत्मसंसृतेः कारणम् माया सकारका अञ्जसा प्रविलीयते ॥

(இ-ள்.) எப்போது (சுத்த) அந்தக்கரணத்தில் பரமாத்ம (ஈசுவர) ஆத்ம (ஜீவ) பேதத்தினைப் பேதிக்கும் பிரகாசவடிவவிஞ்ஞானம் விளங்குகின்றதோ, அப்போதுதான் ஜீவனது சம்சாரத்திற்குக் காரணமான மாயை காரகங்களோடு உடனே கெடுகின்றது. (எ-று)

---

* "नेति नेति இத்தன்மையதன்று, இத்தன்மையதன்று" என்பது சுருதி.

† மித்தை யென்று நிச்சயித்து.

இங்கு ஈசுவரஜீவர்களுக்கு மாயையும் அந்தக்கரணமுமாகிய * உபாதியினுலாகிய பேதமே யுளது; உண்மையில் பேத மில்லை. அப்பேதமும், அந்நியவிருத்திகளை யடக்குதலை முன்னிட்ட பிரஹ்மாகார அகண்டவிருத்தியான விஞ்ஞானம் † அசம்பாவனைமுதலியவற்றின் நீக்கத்தால் பிரகாசிக்கும்போது கெட்டுப்போகின்றது. (கஅ)

श्रुतिप्रमाणाभिविनाशिता च सा कथं भविष्यत्यपि कार्यकारिणी ।
विज्ञानमात्रादमलाद्द्वितीयतस्तस्मादविद्या न पुनर्भविष्यति ॥ १९ ॥

(அ-கை.) முற்கூறிய பொருளினையே திடமாக்குதற் பொருட்டுக் கூறுகின்றார்:—

श्रुतिप्रमाणाभि विनाशिता सा च कथं अपि कार्यकारिणी भविष्याति॥

(இ-ள்.) சுருதிப்பிரமாணங்களால் (அவற்றினுலுண்டாகும் ஞானவாயிலாக) நாசமாவதான அவ்வவித்தையும் எப்படிக் காரியஞ் செய்வதாகும்? அசத்திற்குக் காரியஞ் செய்யுந்தன்மை பொருந்தாமையால் எவ்வாற்றானு மாகாதென்பது பொருள். (எ-று)

* உபாதியினிலக்கணம் பாலபோதம், விசாரசந்திரோதயமுதலியவற்றில் காண்க.

† அசம்பாவனை = சம்சயம்.

(அ-கை.) மறுபடியும் அதற்கு உற்பத்தி யில்லை யென்பதனைக் கூறுகின்றார் :—

अमलाद्द्वितीयतः विज्ञानमात्रात् अविद्या (नष्टा) तस्मात् पुनः न भविष्यति ॥

(இ-ள்.) சுத்தாத்விதீயமான ஆத்மாவை விஷயஞ் செய்யும் விஞ்ஞானமாத்திரத்தினால் அவித்தை (நஷ்டமா யிருக்கின்றது); அதனால் மறுபடியும் உண்டாகாது. (எ-று)

இரஜ்ஜுவை (பழுதையினை) யறியாமைகாரணமாக வுண்டாகிய சர்ப்பம் (பாம்பு) இரஜ்ஜுவை யறிதலால் நிவிருத்தியாகி மறுபடியும் உண்டாகாததுபோல உண்டாகா தென்பது கருத்து. (கக)

यदिस्म नष्टा न पुनः प्रसूयते कर्ताऽहमस्येति मतिः कथं भवेत् ।
तस्मात्स्वतन्त्रा न किमप्यपेक्षते विद्या विमोक्षाय विभाति केवला ॥२०॥

(அ-கை.) வித்தைக்குப் பிறவற்றின் அபேக்ஷையின்றியே மோக்ஷத்திற்குக் காரணமாந்தன்மை கூறப்பட்டது. அதனைக் கேட்பவனுக்குத் திடத்தன்மை யுண்டாம் பொருட்டு யுக்திபூர்வகமாக மறுபடியும் கூறுகின்றார் :—

यदि (अविद्या) नष्टास्म पुनः न प्रसूयते अहम् अस्य कर्ता इति मति :कथं भवेत् तस्मात् स्वतन्त्रा विद्या किम् अपि न अपेक्षते विमोक्षाय केवला विभाति ॥

(இ-ள்.) அவித்தை (ஞானத்தினல்) நஷ்டமாய் மறுபடியும் பிறவாதெனின், (அப்போது காரண மில்லாமையால்) யான் இதன் கர்த்தா என்னும் புத்தி எப்படி உண்டாகும்? (எவ்விதத்தாலும் உண்டாகா தென்பது பொருள்.) ஆதலால் சுவதந்திரமான வித்தையானது எதனையும் அபேக்ஷிக்கிறதில்லை; இரண்டாவது சம்பவியாமையால்). முக்தியின் பொருட்டுத் தானு(சகாயமின்றியதா)கவே விளங்குகின்றது. (எ-று)

முக்தியாகிய பயனைத் தருவதாகின்ற தென்பது பொருள். (உ0)

सा तैत्तिरीयश्रुतिराह सादरं न्यासं प्रशस्ताखिलकर्मणां स्फुटम् ।
एतावदित्याह च वाजिनां श्रुतिर्ज्ञानं विमोक्षाय न कर्म साधनम् २१

(அ-கை.) இவ்வர்த்தத்தில் சுருதியும் பிரமாணமாமென்று கூறுகின்றார் :—

सा तैत्तिरीयश्रुतिः प्रशस्ताखिलकर्मणां न्यासम् सादरम् स्फुटम् आह वाजिनाम् श्रुतिः एतावत् इति आह ज्ञानम् विमोक्षाय साधनम् कर्म न ॥

(இ-ள்.) அந்த (பிரசித்தமான) தைத்திரீயசுருதி புகழப்பட்ட சகல கர்மங்களின் நியாசத்தை (விடுதலை) ஆதரவோடு வெளிப்படையாகக் கூறுகின்றது. வாஜஸநேய சுருதி "இவ்வளவு ........." என்பதனாலும் ஞானம் மோக்ஷத்திற்குச் சாதன மாகின்றது; கர்மமாகிற தில்லை என்று கூறுகின்றது. (எ-று)

"न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः— கர்மத்தினாலும் பிரஜையி (புத்திர)னாலும் இல்லை; தனத்தினாலும் இல்லை; (இவற்றை) விடுதலினாலேயே மோக்ஷத்தை அடைகிறான்." என்பது தைத்திரீயசுருதி.

एतावदरे खल्वमृतत्वमित्यादिकाज्ञानं विमोक्षाय साधनं न कर्म அடே! இவ்வளவினாலேயே நிச்சயமாக அமிருதத்துவ(மோக்ஷ)முண்டாகின்றது என்னும் ஞானம் மோக்ஷத்திற்குச் சாதனமாம்; கர்மமன்று." என்பது வாஜஸனேயசுருதி. (உக)

विद्यासमत्वेन तु दर्शितस्त्वया क्रतुर्न दृष्टान्त उदाहृतः समः ।
फलैः पृथक्त्वाद्बहुकारकैः क्रतुः संसाध्यते ज्ञानमतो विपर्ययम् ॥२२॥

(அ-கை.) அகங்காரம் அகங்காரநீக்கம் என்னும் காரணத்தின் வேற்றுமையால் கிரியைக்கும் ஞானத்திற்கும் விஷமத்தன்மை கூறி, அவற்றின் பயனும் விஷமமுள்ளன வாமென்று கூறுகின்றார் :—

(हे समुच्चयवादिन्) त्वया क्रतुः विद्यासमत्वेन दर्शितः तु समः दृष्टान्तः न उदाहृतः ॥

(இ-ள்) (ஏ! சமுச்சயவாதியே!) உன்னால் (அக்கினிஷ்டோமாதி) யாகம் வித்தைக்குச் சமானமாகக் காட்டப்பட்டது. ஆனால் சமமான திருஷ்டாந்தம் சொல்லப்படவில்லை. (எ-று.)

இதனால் யாகம் வித்தைக்குச் சமானமாம்; சுருதியினால் அறிவிக்கப்பட்ட கர்த்தவ்வியத்தன்மை யுடைமையால் என்னும் அநுமானம் மறுக்கப்பட்டது; திருஷ்டாந்தமின்மையால். அந்வயியநுமானமே, வியதிரேகி யன்று என்பது கருத்து. இஃது *ஆகாகிரந்தத்தில் விஸ்தாரமாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை.) அப்படியானால் வித்தையும் கர்மமும் சமம், ஒருபயனுடைமையால், சக்கரம் தண்டமுதலியவற்றைப்

---

* பேதிக்காரமுதலிய வாதகிரந்தங்களை ஆகாகிரந்தமென்பர்.

போல என்னும் அநுமானமாமெனின், அங்குக் கூறுகின்றார்:—

फलैः पृथक्त्वात् ॥

(இ-ள்.) பயன்களால் வேறு வேறா யிருத்தலின்(எ-று)

பயன்களுக்கு வேற்றுமை யிருத்தலால் சமமாகா என்பது பொருள். இவ்வாறாகவே * சொருபாசித்தியில் ஏதுவா மென்பது கருத்து.

(அ-கை.) சமான காரகத்தன்மையும் ஏதுவன்றென்று கூறுகின்றார்:—

बहुकारकैः क्रतुः संसाध्यते ज्ञानं तु अतः विपर्य्ययम् ॥

(இ-ள்.) † வெகுகாரகங்களால் யாகம் சாதிக்கப்படுகின்றது. ஞானமோ இதனினும் மாறுபட்டதாம். (எ-று.)

இதனால் அவ்விரண்டற்கும் சமத்துவம் கூடாதென்பது கருத்து. (௨௨.)

---

* சொருபாசித்தியின் இலக்கணம் தர்க்ககௌமுதியில் காண்க.

† அகர்த்தமமதையபிமானவடிவமான உள்வெளிப்பொருள்களும், தேசகாலாதி நியமங்களும் காரகங்களாம்.

सप्रत्यवायो ह्यहमित्यनात्मधीरज्ञप्रसिद्धा न तु तत्त्वदर्शिनः ।
तस्माद्बुधैस्त्याज्यमपि क्रियात्मभिर्विधानतः कर्मविधिप्रकाशितम् ॥२३॥

(அ-கை.) அப்படியானல் செய்யாவிடத்துப் பிரத்தியவாய முண்டா மென்னும் பயத்தால் கர்மம் செய்யத்தக்கதா மெனின் இல்லை யென்று கூறுகின்ருர் :—

अहम् सप्रत्यवायः इति अनात्मधीः अज्ञप्रसिद्धा तत्त्वदर्शिनः तु न । तस्मात् क्रियात्मभिः बुधैः विधानतः विधिप्रकाशितम् अपि कर्म त्याज्यम् ॥

(இ-ள்.) (கர்மத்தை விடுவதனல் நிச்சயமாக) யான் பிரத்தியவாயமுடையவ னுவேன் என்று (சுத்தாத்மாவில்) அநாத்மதர்மத்தின் புத்தி அஞ்ஞானியி (தத்துவஞான மில்லாதவ) னிடத்துப் பிரசித்தமானதாம்; தத்துவஞானிக் கில்லை. ஆதலால் கர்மமார்க்கத்திற் பொருந்திய சித்தமுள்ளவர்களாகிய விவேகிகளால் விதானமாக (கர்த்தவ்வியத்தன்மையோடு கூடியதாக) விதிவாக்கியங்களால் பிரகாசி(அவசியம் செய்யத்தக்கதா மென்றறிவி)க்கப்பட்டதாயினும் கர்மம் விடவேண்டியதாம். (எ-று.)

யான் என்னும் புத்தி யில்லாமையாலும், பாபமுதலியன அநாத்மதர்ம மென்னும் நிச்சயத்தாலும் பிரத்தியவாயம் தத்துவஞானிக் கில்லை யென்ருர். (உங)

श्रद्धान्वितस्तत्त्वमसीति वाक्यतो गुरोः प्रसादादपि शुद्धमानसः ।
विज्ञाय चैकात्म्यमथात्मजीवयोः सुखी भवेन्मेरुरिवाप्रकम्पनः ॥२४॥

(இ-ள்.) இப்போது விரக்தனுடைய காரியத்தைக் கூறுகின்றார்:—

अथ श्रद्धान्वितः शुद्धमानसः अपि गुरोः प्रसादात् तत्त्वमसि इति वाक्यतः आत्मजीवयोः ऐकात्म्यम् विज्ञाय मेरुः इव अप्रकम्पनः (सन्) सुखी भवेत् ॥

(இ-ள்.) பின் * சிரத்தையோடுகூடியவனாய்ச் சுத்த மனதுடையவனாயினும், குருமூர்த்தியின் பிரசாத (அனுக்கிரக) த்தினால் கிடைத்த தத்துவமஸி (அது நீயா யிருக்கிறாய்) என்னும் வாக்கியத்தினால் ஆத்துமாவுக்கும் ஜீவனுக்கும் ஒருமையை † அறிந்து, (விஷயாபிலாஷையினால்) மேருவினைப்போல அசைக்கப்படாதவனாய்ச் சுகி (ஆனந்தமுடையவன்) ஆகின்றான். எ-று. (௨௪)

आदौ पदार्थावगतिर्हि कारणं वाक्यार्थविज्ञानविधौ विधानतः ।
तत्त्वंपदार्थौ परमात्मजीवकावसीति चैकात्म्यमथानयोर्भवेत् ॥ २५ ॥

---

* குருசாஸ்திரவாக்கியங்களி லுண்டாகும் விசுவாசம் சிரத்தை யெனப்படும்.

† மனனநிதித்தியாசனத்தின் பரிபாகங்களால் சாக்ஷாத்கரித்து.

(அ-கை.) மகாவாக்கியத்தினை விரித்தற்கு வாக்கியார்த்தம் பதார்த்தஞானத்தினை முன்னிட்டதாதலைக் கூறுகின்றார்:—

विधानतः वाक्यार्थविज्ञानविधौ आदौ पदार्थावगतिः कारणम्
तत्त्वंपदार्थौ परमात्मजीवकौ हि अथ असि इति च अनयोः ऐकात्म्यं
भवेत् ॥

(இ-ள்.) விதானத்தால் (பிரமப்பிரமாதமின்றியதன்மையாக) வாக்கியார்த்தஞான முண்டாவதில் முதலில் பதங்களின் பொருளை யறிதல் காரணமா மென்பது பிரசித்தமாம். ஆகவே (மகாவாக்கியத்துள்ள) "தத்" "துவம்" பதங்க ளிரண்டற்கும் பொருள் பரமாத்மாவும் ஜீவனுமாம். பின் அஸி (இருக்கிறாய்) என்னும் பதம் இவ்விரண்டன் ஒருமையை அறிவிப்பதாகின்றது. எ-று. (௨௫)

प्रत्यक्परोक्षादिविरोधमात्मनोर्विहाय संगृह्य तयोश्चिदात्मताम् ।
संशोधितां लक्षणया च लक्षितां ज्ञात्वा स्वमात्मानमथाद्वयो भवेत् २६

(அ-கை.) அப்படியானால் சர்வஞ்ஞத்துவமுதலிய குணமுடைய ஈசனுக்குக் கிஞ்சிஞ்ஞத்துவமுதலிய தர்மமுடைய ஜீவனோடு ஒருவடிவாந்தன்மை விருத்தமா மென்று சங்கித்துக் கூறுகின்றார்:—

आत्मनोः प्रत्यक्परोक्षादिविरोधम् विहाय संशोधिताम् लक्षणया च लक्षिताम् तयोः चिदात्मताम् संगृह्य स्वम् आत्मानम् ज्ञात्वा अथ अद्वयः भवेत् ॥

(இ-ள்.) ஜீவாத்மாவுக்கும் பரமாத்துமாவுக்குமுள்ள பிரத்தியக்கு (உள்) பரோக்ஷத்துவமுதலிய விரோதத்தினை விட்டு, (யுக்திவாயிலாகச்) செவ்வையாய் விசாரிக்கப்பட்டதும், இலக்ஷணையினால் இலக்ஷியிக்கப்பட்டதுமான அவ்விரண்டன் சித்துவடிவத்தன்மையினைச் செவ்வையாய்க் கிரகித்து, தனது ஆத்மசொரூபத்தை அறிந்து, (ஒருமையுணர்ச்சிக்குப்) பின் அத்வயனாகின்றான். (எ-று.)

யான் என்னும் உணர்ச்சியினால் அறியப்படுந்தன்மையாகிய பிரத்தியக்குத்தன்மை ஜீவதர்மமும், பரோக்ஷத்துவம் ஈசுவரதர்மமுமா மெனக்கொள்க.

தத்துவம்பதங்கட்குச் சிதாத்மவடிவ ஒருமையில் * சக்தியில்லையாயினும், இனிச் சொல்லப்படும் இலக்ஷணையுண்டென்பார் இலக்ஷணையினால் இலக்ஷயிக்கப்பட்டதென்றார்.

இங்கு அத்வயனாகின்றான் என்றது சிற்சொரூபனைப் போலவாகின்றான் என்பதாம். ஏனெனின், முன்னும் சிற்

* சொல்லிற்குப் பொருளோடுள்ள நேர்சம்பந்தம் சக்தி. சொல்லிற்குப் பொருளோடுள்ள பாம்பரைச்சம்பந்தம் லக்ஷணை.

சொரூபனே. ஆனால் மறந்த * கழுத்தின் ஆபரணத்தினைப் போல அதன் பிராப்தியாம் (அடைவாம்). ஆதலால் சிற்சொபனைப்போல என்று சொல்லப்பட்டது.

இதன் தாற்பரியம் இதுவாம்:-தத்பததுவம்பதங்கட்கு வாச்சியம் இலக்ஷியம் என்று இரண்டு அர்த்தங்க ளுண்டு. அவற்றுள்,

௧. (௧) தத்பதத்திற்கு மாயையினை யுபாதியாகவுடையசர்வஞ்ஞத்தன்மைமுதலிய விசேஷணமுடையவன் வாச்சியன்.

(௨) துவம்பதத்திற்கு கிஞ்சிஞ்ஞத்துவமுதலிய விசேஷணமுடையவனாய் மாயையின் காரியமான அவித்தையினை அல்லது அந்தக்கரணத்தினை யுபாதியாக வுடையவன் வாச்சியன்.

௨ (௧-௨) இரண்டன் விசேஷணம்சத்தினையும் விடுதலால் சுத்தசிதாத்மா இலக்ஷியமாம்.

அவற்றுள், வாச்சியங்கட்கு விரோதத்தர்மமுடையனவாயிருத்தலின் ஐக்கியம் சம்பவியாதாயினும், இலக்ஷியங்கட்கு ஐக்கியம் பாதமின்றியதேயாம் என்க. (௨௯)

---

* இதனைக் கண்டசாமீகாநியாய மென்பர்.

एकात्मकत्वाज्जहती न संभवेत्तथाऽजहल्लक्षणता विरोधतः ।
सोऽयंपदार्थाविव भागलक्षणा युज्येत तत्त्वंपदयोरदोषतः ॥ २७ ॥

(அ-கை.) முற்கூறிய லக்ஷணையின் சொருபத்தைக் கூறுகின்றார்:—

एकात्मकत्वात् जहती तथा विरोधतः अजहल्लक्षणता न संभवेत् ।
सोयंपदार्थौ इव तत्त्वंपदयोः भागत्यागलक्षणा अदोषतः युज्येत ॥

(இ-ள்.) ஒருவடிவினதா யிருத்தலின் ஜஹதீலக்ஷணையும், அப்படியே விரோதமிருத்தலால் அஜஹதீலக்ஷணையும் சம்பவியா. அவனே இவன் என்னும் பதங்களிற் போல தத்துவம்பதங்கட்குப் பாகத்தியாகலக்ஷணை தோஷமின்மையாற் பொருந்துகின்றது. (எ-று.)

இலக்ஷணை மூவகையினதாம். ௧. ஜஹத்ஸ்வார்த்த லக்ஷணை ௨. அஜஹத்ஸ்வார்த்தலக்ஷணை ௩. ஜஹதஜஹத்ஸ்வார்த்தலக்ஷணை. அவற்றுள்,

௧. கங்கையில் இடைச்சேரி யென்னுமிடத்துக் கங்கையின் அர்த்தமான பிரவாக(வெள்ள)த்தினுக்கு இடைச்சேரிக் காதாரமாந்தன்மை யின்மையால் அது முழுவதனையும் விட்டுக் கரையாகிய பொருளைக் கொள்ளுதல் ஜஹத்ஸ்வார்த்த( தற்பொருளைவிட்ட )லக்ஷணையாம்.

இதனை ஜஹதீலக்ஷணே யென்றும், விட்டலக்கணே யென்றும் கூறுவர். அதுபோல இங்கு இருபதங்கட்கும் விசேஷியாம்சம் ஒன்று யிருத்தலால் முற்றும் ஸ்வார்த்தம் (தற்பொருள்) விடுதல் கூடாமையின் ஜஹத்லக்ஷணை பொருந்தாது.

௨. தனது பொருளை விடாது வாச்சியமல்லாதபொருளையும் கொள்ளுதல் அஜஹத்ஸ்வார்த்த (தற்பொருள்விடாத)லக்ஷணையாம். இதனை அஜஹதீலக்ஷணே யென்றும், விடாதலக்கணே யென்றும் கூறுவர். அது "காக்கைகளினின்றும் தயிரை இரக்ஷிக்க" என்பது முதலியவற்றில் காகபதத்திற்குத் தனது பொருளை விடாமலே தயிரைக் கெடுக்கும் பூனைமுதலியவற்றில் லக்ஷணை யிருப்பது போலவாம். அஃது இங்குத் தத்துவம்பதங்களின் வாச்சியார்த்தங்கட்கு விரோத மிருத்தலால் பொருந்தாது; விசேஷணங்களை விடாதபோது முற்றும் ஸ்வார்த்தம் விடுபடாமையால்.

௩. வாச்சியார்த்தங்களின் ஒரு பாகத்தை விட்டு ஒருபாகத்தை விடாது கொள்ளுதல் பாகத்தியாகலக்ஷணேயாம். இதனை ஜஹதஜஹத்ஸ்வார்த்தலக்ஷணே யென்றும், ஜஹதஜஹதீலக்ஷணே யென்றும், விட்டுவிடாதலக்கணே யென்றும் கூறுவர். அஃது "அவனே இத்தேவதத்தன்" என்பது முதலியவற்றில் வாச்சியார்த்தங்களின் அத்தேசகாலாதிகளுக்கும் இத்தேசகாலாதிகட்கும் விரோத மிருத்

தலால் அவ்விசேஷணும்சமான ஒருபாகத்தை விட்டுத் தேவதத்தனது சரீரபிண்டமான விசேஷியாம்சத்தை விடாது கொள்ளுதல்போலவாம். இது (பாகத்தியாக லக்ஷணை) இங்குத் தத்துவம் பதங்கட்குப் பொருத்த முடையதாம்; சர்வஞ்ஞத்வகிஞ்சிஞ்ஞத்துவாதி தர்மங்களாகிய விசேஷணபாகங்கட்கு விரோத மிருத்தலால் அவற்றை விட்டு, அவிரோதமான சித்துவடிவ விசேஷியாம்சத்தினைக் கொள்ளுதலால் என்க. (உஎ)

रसादिपञ्चीकृतभूतसंभवं भोगालयं दुःखसुखादिकर्मणाम् ।
शरीरमाद्यन्तवदादिकर्मजं मायामयं स्थूलमुपाधिमात्मनः ॥ २८ ॥

(அ-கை.) இனி விடுதல் ஏதுவாக ஜீவனது * உபாதியினைக் கூறுகின்றார்:—

रसादिपंचीकृतभूतसंभवम् दुःखसुखादिकर्मणाम् भोगालयम् आद्यन्तवत् आदिकर्मजम् मायामयम् शरीरम् आत्मनः स्थूलम् उपाधिम् विदुः ॥

(இ-ள்.) பிருதிவிமுதலிய பஞ்சீகிருதபூதங்களினின் றுண்டாகியதும், சுகதுக்காதி கர்மங்களை யுண்டுபண்

* இப்பூதபஞ்சீகாரணத்தினை விஸ்தாரமாய் அறிய விரும்புவோர் ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் ௩-வது கலையிற் காண்க.

னும் கர்மங்களின் போகாலயமும், ஆதியந்தமுடையதும், ஆதி (முற்பிறப்புகளின்)கர்மத்தாற் றோன்றியதும், மாயாமயமு (மாயையின் காரியமு)மான சரீரத்தினை ஆத்மாவிற்கு ஸ்தூலவுபாதியாக விவேகிகள் அறிவர். (எ-று.)

ஒவ்வொரு பூதத்தினையும் இரண்டிரண்டாகப் பிரித்து, அதில் ஒருபாகத்தினை நந்நான்காகப் பிரித்து, அந் நான்கு பாகங்களையும் தத்தம் அரையரைப் பாகங்களோடு சேர்க்காமல் மற்றப் பூதங்களின் அரைப்பாகங்களோடு சேர்த்தால், அப்போது ஒவ்வொருபூதமும் ஐந்து ஐந்து வடிவினதாகின்றது. இப்படி ஐந்து ஐந்து ஆக்குதலைப் பஞ்சீகரண மென்றும், அவ்வாறு ஆக்கப்பட்டதனைப் பஞ்சீகிருத மென்றும் கூறுவர்.

सूक्ष्मं मनोबुद्धिदशेन्द्रियैर्युतं प्राणैरपञ्चीकृतभूतसंभवम् ।
भोक्तुः सुखादेरनुसाधनं भवेच्छरीरमन्यद्विदुरात्मनो बुधाः ॥ २९ ॥

(அ-கை.) இப்போது ஸூக்ஷ்மவுபாதியினையும் அதன் சொரூபத்தையும் கூறுகின்றார்:—

बुधाः मनोबुद्धिदशेन्द्रियैः प्राणैः युतं अपंचीकृतभूतसंभवम् अन्यत् शरीरम् आत्मनः सूक्ष्मम् विदुः। (एतत्) भोक्तुः सुखादेः अनुसाधनं भवेत् ॥

(இ-ள்.) அறிஞர் மனம் புத்தி தசேந்திரியங்கள் என்பவற்றோடும் பிராணன்களோடும் கூடியதும், அபஞ்சீகிருதபூதங்களினின் றுண்டாகியதுமான மற்றைய (லிங்க) சரீரத்தினை ஆத்மாவின் சூக்ஷ்மவுபாதியாக அறிவர். இது போக்தாவின் சுகாதிகளுக்குச் சாதனம் (கருவி) ஆகின்றது. (எ-று)

இது பிரிதலினாலேயே மரணவியவகாரமா மென்று அறியத்தக்கதாம்.

சங்கற்பவடிவினது மனம். நிச்சயவடிவினது புத்தி. கிராணம், ரசனை, சக்ஷு, துவக்கு, சுரோத்திர மென்னும் ஞானேந்திரியம் ஐந்தும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்த மென்னும் கர்மேந்திரியமைந்தும் தசேந்திரிய மெனப்படும். பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்னும் ஐந்தும் பிராணன்களாம்.

எந்தப்பூதங்கட்குப் பஞ்சீகரண முண்டாகவில்லையோ, அவை அபஞ்சீகிருதபூத மெனப்படும். சக்ஷுமுதலியவற்றிற்கு விஷயமாகாமை சூக்ஷ்ம மெனப்படும்.

சுகதுக்காதிகளை அநுபவிப்பவன் போக்தா வெனப்படுவன். (உக)

अनाद्यनिर्वाच्यमपीह कारणं मायाप्रधानं तु परं शरीरकम् ।
उपाधिभेदात्तु यतः पृथक्स्थितं स्वात्मानमात्मन्यवधारयेत्क्रमात् ॥३०॥

(அ-கை.) இவ்வாறு ஜீவோபாதி இரண்டனையும் கூறி ஈசோபாதியைக் கூறுகின்றார் :—

अनादि अनिर्वाच्यम् अपि इह कारणम् माया तु परम् प्रधानम् शरीरकम् । यतः उपाधिभेदात् पृथक् स्थितम् (अतः) क्रमात् स्वात्मानम् आत्मनि अवधारयेत् ॥

(இ-ள்.) அநாதி அநிர்வாச்யமாயினும் இக்காரண வடிவமாயை மேலான பிரதான(முக்கிய)சரீரமாம். எதனால் உபாதிபேதத்தினால் * வேறுபட்டதாய் நிற்கின்றதோ, † அதனால் ‡ கிரமமாகத் தன் ¶ ஆத்மாவைப் $ பரமாத்மாவில் § நிச்சயிக்கவேண்டும். (எ-று)

மாயை உற்பத்தியில்லாததாகலின் அநாதி யென்றார். நாநாவிதபரிணாம சுபாவமுடைமையால் பரிணாமவடிவத்தால் நசுவரம் (கெடுவது) என்பது அநாதித்தன்மைமாத்திரம் கூறியதனால் சூசிப்பிக்கப்பட்டது.

---

* ஜீவன் ஈசன் என்னும் பேதபுத்திக்கு விஷயமாக.

† இலக்ஷணையினாலே உபாதியை விடுதலால்.

‡ சிரவணமனனநிதித்தியாசனக்கிரமமாக.

¶ ஜீவாதிஷ்டானமாகிய கூடஸ்தனை.

$ பிரஹ்மத்தில்.

§ அபேதமாக அறியவேண்டும்.

சத்துத்தன்மையசத்துத்தன்மைகளால் உறுதியாய்ச் சொல்லக்கூடாததா யிருத்தலின் அநிர்வாச்சிய மென்றார்.

சகலப் பிரபஞ்சத்தையும் பெறுவதா யிருத்தலின் காரண மென்றார். அச்சரீரம் பிரஹ்மத்திற்கு ஈசுவரவியவ காரத்தைச் சம்பாதிக்குந்தன்மையால் மேலான தெனப்பட் டது. (௩0)

कोशेष्वयं तेषु तु तत्तदाकृतिर्विभाति संगात्स्फटिकोपलो यथा ।
असंगरूपोऽयमजो यतोऽद्वयो विज्ञायतेऽस्मिन्परितो विचारिते ॥२१॥

(அ-கை.) இப்போது வாக்கியார்த்தவிசாரத்தின் பய னைக் கூறுகின்றார் :—

अयम् तेषु कोशेषु तु यथा स्फटिकोपलः तथा सङ्गात् तत्तदाकृतिः विभाति । यतः परितः अस्मिन् विचारिते अयम् असङ्गरूपः अजः अद्वयः विज्ञायते ॥

(இ-ள்.) இவ்வாத்மா அக்கோசங்களில் எப்படி ஸ்படிகமணியோ, அதுபோல சம்பந்தத்தால் அவ்வவ்வடிவ முடையதாகத் தோற்றுகின்றது. ஏதனாலெனின், செவ் வையாய் இது (மகாவாக்கியம்) விசாரிக்கப்பட்டபோது

இஃது * அசங்கவடிவினதும், பிறப்பற்றதும், அத்துவயமுமாக அறியப்படுகின்றது. (எ-று)

அக்கோசங்களில் என்று பொதுப்படக் கூறினமையால் ஆநந்தமயன் பிரஹ்ம மென்பவர் அந்நமயாதி நான்கு கோசங்களையும், ஆநந்தமயனுக்கும் ஜீவத்துவம் கூறுபவர் அஃதுட்பட ஐந்து கோசங்களையும் கொள்ளுவர்.

ஸ்தூலன் யான் என்றல் முதலியன ஸ்படிகம்போல அந்தந்தக் கோசசம்பந்தத்தால் அஞ்ஞனுக்குத் தோற்றுகின்றது, தத்துவமுணர்ந்தவனுக்கோ அவ்வாறு தோற்றுகிறதில்லை யென்பது கருத்தாம். ஆகவே அந்தந்த வுபாதியினாலாகிய அவ்வவ்வடிவத்தோற்றம் நீங்குதலே விசாரத்தின் பயன் என்பது கருத்தாயிற்று. (௩௧)

बुद्धेस्त्रिधा वृत्तिरपीह दृश्यते स्वप्नादिभेदेन गुणत्रयात्मनः ।
अन्योन्यतोऽस्मिन्व्यभिचारतो मृषा नित्ये परे ब्रह्मणि केवले शिवे ॥३२॥

(அ-கை.) ஜாக்கிராவஸ்தைகளும் புத்தியின் தர்மமாம்; ஆத்மாவின் தர்மமன் றென்று கூறுகின்றார் :—

इह स्वप्नादिभेदेन (या) त्रिधा वृत्तिः दृश्यते (सा) अपि गुणत्रयात्मनः

---

* "असंगो न हि सज्जते— அசங்கன் சம்பந்திக்கிறதில்லை" என்னும் சுருதியினால்.

बुद्धेः अस्ति । अस्मिन् नित्ये परे ब्रह्मणि केवले शिवे अन्योन्यतः व्यभिचारतः मृषा ॥

(இ-ள்.) இங்கு (ஆத்மாவினிடத்து)ச் சொப்பன முதலிய பேதங்களாக எந்த மூன்றுவிதமான விருத்தி காணப்படுகின்றதோ, அதுவும் குணமூன்றன்வடிவினதாகிய புத்தியினதாம். இந்த நித்தியமும் பரமும், பிரஹ்ம (வியாபக)மும், கேவல(அசங்க)மும், சிவ(ஆநந்தவடிவ)முமான ஆத்மாவில் (இவையிருத்தல்) ஒன்றற்கொன்று * வியபிசாரமுடையனவா யிருத்தலின் மித்தையாம் (கற்பிதமாம்). (எ-று)

ஆத்மா உற்பத்திநாசமில்லாததென்பார் நித்தியமென்றும், குணத்திரயாதீதமென்பார் பரமென்றும் கூறினார்.

சொப்பனகாலத்தில் ஜாக்கிரசுழுத்திக ளில்லாமையாலும், ஜாக்கிரத்தில் மற்றிரண்டு மின்மையாலும், சுழுத்தியில் மற்றிரண்டு மில்லாமையாலும் ஒன்றற்கொன்று வியபிசாரமுடைமை அறியத்தக்கதாம். ஆத்மா அந்த வியபிசாரத்திற்கு ஆசிரயமாகாமை உணர்த்துதற்பொருட்டே நித்தியாதி விசேஷணங்கள் கூறப்பட்டன. (கூஉ)

---

* வியபிசாரம் = பிறழ்ச்சி.

देहेन्द्रियप्राणमनश्चिदात्मनां सङ्घादजस्रं परिवर्तते धियः।
वृत्तिस्तमोमूलतयाज्ञलक्षणा यावद्भवेत्तावदसौ भवोद्भवः॥ ३३॥

(அ-கை.) இனி விடத்தக்க தாகும்பொருட்டுச் சம் சாரகாரணவடிவமான விருத்தியினைக் கூறுகின்றார் :—

देहेंद्रियप्राणमनश्चिदात्मनां सङ्घात् अजस्रम् धियः वृत्तिः तमोमूल-तया अज्ञलक्षणा यावत् परिवर्त्तते तावत् असौ भवोद्भवः भवेत्॥

(இ-ள்.) தேகம் இந்திரியம் பிராணன் மனம் சிதாத் மா என்பவற்றின் கூட்டத்(அந்நியோந்நியாத்தியாசத்) தால் அடிக்கடி புத்தியின் விருத்தி (அவஸ்தை), தமோ குணம் மூலகாரணமா யிருத்தலால் அஞ்ஞானத்தினை அறி விப்பதாய் எதுவரையில் மாறு (பிரவர்த்திக்) கின்றதோ, அதுவரையில் இந்தச்சம்சாரத்தின் உற்பத்தி யுண்டா கின்றது. (எ-று.)

தமம் என்னும் சொல் இரஜஸுக்கும் உபலக்ஷண மாம். இராஜஸதாமஸப்பிரதானமா யிருத்தலால் புத்தி சம் ஸாரத்திற்குக் காரணமா யிருத்தலின் முற்றும் விடத்தக்க தேயா மென்பது தாற்பரியம். (கூகூ)

नेति प्रमाणेन निराकृताखिलो हृदा समास्वादितचिद्घनामृतः।
त्यजेदशेषं जगदात्तसद्रसं पीत्वा यथाम्भः प्रजहाति तत्फलम्॥ ३४॥

(அ-கை.) செய்யப்பட்ட மகாவாக்கியவிசாரத்தின் கர்த்தவ்வியத்தினைக் கூறுகின்றார் :—

न इति प्रमाणेन निराकृताखिलः हृदा समास्वादितचिद्धनामृतः अशेषम् जगत् यथा (तृषावान्) आत्तसद्रसम् अम्भः पीत्वा तत्फलम् प्रजहाति (तथा) त्यजेत् ॥

(இ-ள்.) இத்தன்மையது அன்று என்னும் (சுருதிப்) பிரமாணத்தினால் சகலத்தையும் *நிராகரித்தவனாய் † இருதயத்தினால் செவ்வையாய்ச் சுவைக்கப்பட்ட ‡ சிற்கனாமிருதமுடையவனாய், ¶ சகல ஜகத்தையும் $ எப்படி (தாகமுடையவன்) கிரகித்திருக்கும் நல்ல ரஸங்களையுடைய ஜலத்தினைப் பருகிவிட்டு (ரஸத்தின் இருப்பிடமான தெங்கு,

---

* மித்தியாத்தன்மையாகக் கிரகித்தவனாய்.

† சத்துவப்பிரதானமாகிய மனதினால்.

‡ சித்துவடிவ அதாவது ஞானவடிவ கனாமிருதத்தினை அதாவது துக்கங்கலவாத சுகத்தினைச் செவ்வையாய் உருசித்தவனாய்.

¶ சகலஜகத்தையும் = தேகேந்திரியாதி திருசியக்கூட்டங்களை.

$ தேகேந்திரியாதிகளினாலேயே அந்த ஞானம் கிடைப்பதாயிருத்தலால் உய்தற் கேதுவா யுள்ளவற்றை விடுவ தெப்படி யென்னும் சங்கை இத்திருஷ்டாந்தத்தால் பரிகரிக்கப்பட்டது.

நாரத்தைமுதலிய) அந்தப் பழத்தை நீக்கிவிடுகின்றானோ (அப்படி) || விட்டுவிடுவேன். (எ-று.)

சுவர்க்காதிகளும் பரிணாமதுக்கமா யிருத்தலின் அவற்றையும் கூட்டிச் சகல ஜகத்தையும் என்றார்.

சகல திருசியங்கட்கும் சாராம்சம் பிரஹ்மம். அது கிடைத்தபோது சாரமற்ற திருசியம் கொள்ளத்தக்கது மன்று, தள்ளத்தக்கது மன்று என்பது கருத்து. எதனினின்றும் பயமுதலியன சம்பவிக்கின்றனவோ அது நீக்கத் தக்கதா மென்று சொல்லப்பட்டது. (௩௪)

कदाचिदात्मा न मृतो न जायते न क्षीयते नापि विवर्धतेऽनवः ।
निरस्तसर्वातिशयः सुखात्मकः स्वयंप्रभः सर्वगतोऽयमद्वयः ॥ ३५ ॥

(அ-கை.) மற்றவற்றின் அநித்தியத்தன்மையால் அவற்றில் வைராக்கிய முண்டாதற்பொருட்டு ஆத்மாவிற்கே நித்தியத்தன்மை கூறுகின்றார் :—

अनवः आत्मा कदाचित् न जायते न अपि विवर्द्धते न क्षीयते न मृतः सुखात्मकः निरस्तसर्वातिशयः स्वयंप्रभः सर्वगतः अयं अद्वयः॥

---

|| கொள்ளவேண்டும் தள்ளவேண்டும் என்னும் புத்தியைச் செய்யாது உதாசீனமா யிருப்பன்.

(இ-ள்.) அநவனான ஆத்மா ஒருபோதும் பிறக்கிற தில்லை; வளருகிறது மில்லை; தேய்கிற தில்லை; மரிப்பவனல்லன்; சுகவடிவினன்; (தேகேந்திரியாதி) எல்லாவற்றின் மகத்துவமும் நீங்கிய தன்மையன்; சுவயம்பிரகாசன்; எல்லாவற்றினு மிருப்பவன். இவன் அத்வயன். (எ-று.)

உற்பத்திக்குப் பின்னிருப்பவன் நவன்; அஃதில்லாதவன் அநவன். இதனால் ஜன்மாந்திரமில்லாததன்மை வேறுபிரிக்கப்பட்டது.

நவத்துவம் (புதுமை) இல்லாமையினாலேயே ஜீர்ணத்துவ மில்லாமையால் வேற்றுநிலைமையுண்டாதல்வடிவ பரிணாமமும் நீக்கப்பட்டது.

இதனால் தேகாதிகள் உற்பத்தியாதி ஷட்பாவவிகாரமுடையன, துக்கவடிவின, சாதிசயமுடையன (பெருமை சிறுமையுடையன), பரப்பிரகாசியம் (மற்றொன்றால் பிரகாசிக்கப்படுவன), ஏகதேசத்திருப்பன, துவைதமுடையன. ஆத்மா அவற்றின் வேறு மென்பது சித்தித்தது.

யான் என்னும் புத்திக்கு விஷயமாம் பிரத்தியகாத்மா வென்பார் இவன் என்றார். (௫௫)

एवंविधे ज्ञानमये सुखात्मके कथं भवो दुःखमयः प्रतीयते ।
अज्ञानतोऽध्यासवशात्प्रकाशते ज्ञाने विलीयते विरोधतः क्षणात् ॥२६॥

(அ-கை.) அப்படியானால் இத்தன்மையதாகிய விகாரசூந்யமான ஆத்மாவில் ஜனனமரணாதிப் பிரவாகவடிவ சம்சாரத்தோற்றம் எப்படிக் கூடுமென்று சங்கிக்கின்றான்:

एवंविधे ज्ञानमये सुखात्मके दुःखमयः भवः कथम् प्रतीयते ॥

(இ-ள்.) இத்தன்மைய ஞானவடிவமும் சுகவடிவமுமான ஆத்மாவில் துக்கமயமான சம்சாரம் எவ்வாறு தோற்றுகின்றது? (எ-று.)

(அ-கை.) சங்கைக்கு உத்தரம் கூறுகின்றார்:—

अज्ञानतः अध्यासवशात् प्रकाशते ॥

(இ-ள்.) அஞ்ஞானகாரணமான (தேகாந்தக்கரணாதிகளில் யான் எனது என்னும்) அத்தியாசத்தின் வசத்தினால் தோற்றுகின்றது.

எனவே பிராந்திவடிவமாம் அத்தோற்றம் என்பது அபிப்பிராயம்.

(அ-கை.) இவ்வாறிருக்கின் அச்சம்சாரத்தின் நிவிருத்தி எவ்வாறுண்டாமெனக் கூறுகின்றார்:—

ज्ञाने विरोधतः क्षणात् विलीयते ॥

(இ-ள்.) ஞான முதித்தபோது (அஞ்ஞானத்திற்கு அதனோடு) விரோத மிருத்தலால் கணத்தில் நசிக்கின் றது. (எ-று.)

ஞானம் அஞ்ஞானவிரோதியா யிருத்தலின் அது உதித்த அக்கணத்திலேயே காரணவடிவ அஞ்ஞானம் நசிக் கின்றது. அது நசிக்கவே அதன் காரியமான சம்சாரமும் நசிக்கின்றது; ரஜ்ஜுசர்ப்பம் கெடுவதுபோல என்பது பொருள். (௩௬)

यदन्यदन्यत्र विभाव्यते भ्रमादध्यासमित्याहुरमुं विपश्चितः ।
असर्पभूतेऽहिविभावनं यथा रज्ज्वादिके तद्वदपीश्वरे जगत् ॥ ३७ ॥

(அ-கை.) இனி அத்தியாசத்தின் இலக்ஷணத்தினைக் கூறுகின்றார்:—

यत् अन्यत् भ्रमात् अन्यत्र विभाव्यते अमुम् विपश्चितः अध्या-सम् इति आहुः यथा असर्पभूते रज्ज्वादिके अहिविभावनम् तद्वत् ईश्वरे अपि जगत् ॥

(இ-ள்.) யாதொரு அந்நியவஸ்து (சர்ப்பாதிகள்) பிரமத்தினால் அந்நியவஸ்துவில் (இரஜ்ஜுவாதியில்) தோற் கின்றதோ, இதனை அறிஞர் அத்தியாசம் என்று கூறுகின்

றனர். எப்படிச் சர்ப்பவடிவமில்லாத இரஜ்ஜுமுதலியவற்றில் சர்ப்பத்தோற்ற முண்டாகிறதோ, அதுபோல ஈசுவரனிடத்திலும் ஜகத்து (தேகாதிசம்சாரம்) * (தோற்றுகின்றது). (எ-று.)

विकल्पमायारहिते चिदात्मकेऽहंकार एष प्रथमः प्रकल्पितः ।
अध्यास एवात्मनि सर्वकारणे निरामये ब्रह्मणि केवले परे ॥ ३८ ॥

(அ-கை.) ஆத்மாவினிடத்து ஜகத்துத் தோற்றுவதில் எத்தன்மைய அத்தியாசம் நிமித்தமாமோ அதனைக் கூறுகின்றார்:—

विकल्पमायारहिते चिदात्मके सर्वकारणे निरामये केवले परे ब्रह्मणि आत्मनि प्रथमः एषः अहंकारः प्रकल्पितः ॥

(இ-ள்.) (சர்வ) † விகற்பகாரணமான மாயையின்றியதும், சிற்சொரூபமும், எல்லாவற்றின் காரணமும், நிராமயமும் (நோயில்லாததும்), கேவல (சர்வவிகாரசூனிய) மும், பர (திருசியவிலக்ஷண) மும், பிரஹ்ம (வியாபக) முமான ஆத்மாவில் முதலில் இவ்வகங்காரம் கற்பிக்கப்பட்டது. (அதுதான் அத்தியாசம்.) (எ-று.)

---

* ஆத்மஞானமின்மையால் யதார்த்தமாக அறியப்படுகிறதில்லை.
† உண்மையாக அதன் சம்பந்தமின்றியதும்.

யானென்னும் உணர்ச்சிவடிவினதாகிய அத்தியாசமே சர்வசம்சாரத்திற்கும் காரண மென்பது தாற்பரியம். (௩௮)

इच्छादिरागादिसुखादिधर्मिकाः सदा धियः संसृतिहेतवः परे ।
यस्मात्प्रसुप्तौ तदभावतः परः सुखस्वरूपेण विभाव्यते हि नः ॥३९॥

(அ-கை.) புத்தியி லிருப்பதே சம்சாரம் ஆத்மாவி லிருப்ப தன்றென்று இங்கு அந்வயவியதிரேகங்களைப் பிரமாணிக்கின்றார்:—

परे सदा इच्छादिरागादिसुखादिधर्मिकाः धियः संसृतिहेतवः ।
यस्मात् हि नः प्रसुप्तौ तदभावतः परः सुखस्वरूपेण विभाव्यते ॥

(இ-ள்.) பரத்தில் (சர்வசாக்ஷியாகிய ஆத்மாவில்) எப்போதும் (முக்காலத்திலும்) இச்சைமுதலியனவும் ராகமுதலியனவும் சுகமுதலியனவுமாகிய * (துவந்துவ) தர்மங்களையுடைய புத்திகள் சம்சாரத்திற்குக் காரணங்களாம். எதனாலெனின், நிச்சயமாக நம்மால் சுழுத்தியில் அவை (புத்திவிருத்திகள்) இல்லாமையால் பரம் (ஆத்மா) † சுகசொரூபமாக அறியப்படுகின்றது. (எ-று)

---

* துவந்துவம் = இருமை.

† சம்சாரமுடையதாக அறியப்படுகிற தில்லை யென்பது கருத்து.

இச்சை * உபேக்ஷை, ராகம் துவேஷம், சுகம் துக்கம் என்னும் இவைமுதலிய துவந்துவ(இருமைத்)தர்மங்களை யுடைய புத்திகளுள்ளபோது சம்சாரமா மென்பது அந்வயம். சுழுத்தியில் அவை ஒடுங்கியபோது சுகம் வெளிப்படு தலால் சம்சாரரூபதுக்கமின்மை வியதிரேகம்.

சுழுத்தியினின்று விழித்தவனுக்கு "யான் சுகமாய்த் தூங்கினேன்" என்று நினைவு வருதலால் அப்போது ஆத்ம சொரூபநிச்சயம் இருக்கிறது என்பது தாற்பரியம். (௩௯)

अनाद्यविद्योद्भवबुद्धिबिम्बितो जीवः प्रकाशोऽयमितीर्यते चितः ।
आत्मा धियः साक्षितया पृथक् स्थितो बुध्या परिच्छिन्नपरः स एव हि ४०

(அ-கை.) மறுபடியும் தத்துவம்பதார்த்தத்தின் சொரூபத்தினைக் கூறுகின்றார்:—

अनाद्यविद्योद्भवबुद्धिबिम्बितः चितः प्रकाशः अयम् जीवः इति ईर्य्यते आत्मा धियः साक्षितया पृथक् स्थितः बुध्या परिच्छिन्नपरः सः (सः) एव हि ॥

(இ-ள்.) † அநாதியவித்தையினின் றுண்டாகிய புத்தியில் பிரதிபிம்பித்த சித்தின் பிரகாசமான இது ஜீவனெனப்

---

* உபேக்ஷை = விருப்புவெறுப்பின்மை.

† ஆதி = உற்பத்தி. அஃதில்லாதது அநாதி.

படுகின்றது. ஆத்மா (பரமாத்மா) * புத்தியின் சாக்ஷித் தன்மையாக † வேருக நிற்கின்ற புத்தியின் தர்மங்களின் றிய பரமா யிருக்கின்றது. அச்சீவன் அப்பரமாத்மாவே. இது பிரசித்தம். (எ-று.)

ஜீவன் யான் சுகி என்றல் முதலிய விதமாக அந்தக்க ரணதர்மாத்தியாச முடையவனுவன். பரமாத்மாவோ சாக்ஷித்தன்மையாக எங்கும் இருப்பவனுயினும் அத்தன் மையனுகா னென்பது தாற்பரியம்.

ஞானத்தினுல் பிரதிபிம்பாதாரமான புத்தி விலயமாக வே பிரதிபிம்பமும் விலயமாதலால் அச்சீவன் பரமாத் மாவே யாகின்ருன். (௪0)

चिद्बिम्बसाक्षात्मधियां प्रसंगतस्त्वेकत्र वासादनलाक्तलोहवत् ।
अन्योऽन्यमध्यासवशात्प्रतीयते जडाजडत्वं च चिदात्मचेतसोः ॥४१॥

(அ-கை.) இனிப் புத்திக்கும் ஆத்மாவிற்கும் அந் நியோந்நியாத்தியாசவசத்தினுல் ஒன்றில் ஒன்றன் தர்மமா மென்பது திடமாதற்பொருட்டு மறுபடியும் கூறுகின்ருர் :-

---

* புத்திதர்மங்களின் சம்பந்த மின்றியதன்மையனுய்.

† அந்தரியாமித்தன்மையால் வேருய்.

एकत्र वासात् अनलाक्तलोहवत् चिद्बिम्बसाक्षात्मधियाम् प्रसङ्गतः
चिदात्मचेतसोः अन्योन्यम् अध्यासवशात् जडाजडत्वम् प्रतीयते ॥

(இ-ள்.) ஓரிடத்தில் வசித்தலால் * அநலிற்காய்ந்த இரும்பினைப்போல, சிற்பிரதிபிம்பம் இந்திரியங்களோடுகூடிய மனது அந்தக்கரணம் என்பவற்றின் சமீபமா யிருத்தல் காரணமாகச் சிதாத்மாவிலும் (ஜீவனிடத்தும்) சித்தத்தும் ஒன்றில் ஒன்றன் அத்தியாசவசத்தால் ஜடத்துவமும் அஜடத்துவமும் தோற்றுகின்றன. (எ-று.)

சித்தத்திற்கு (விருத்திகளுக்கு) ஞானத்தன்மையும், ஜீவாத்மாவிற்கு ஜடத்தன்மையும் தோற்றுகின்றன. இதனுற்றான் ஞானசிரயம் ஆத்மா வென்று தார்க்கிகர்வியவகாரமும், ஜீவாத்மாவினிடத்து அறிஞர்களால் ஜடாத்மா வென்று சொல்லப்படுகின்றது என்று ஸ்மார்த்தர்வியவகாரமு முளதாகின்றது. (சக)

गुरोः सकाशादपि वेदवाक्यतः सञ्जातविद्यानुभवो निरीक्ष्य तम् ।
स्वात्मानमात्मस्थमुपाधिवर्जितं त्यजेदशेषं जडमात्मगोचरम् ॥ ४२ ॥

---

* அனலில் இரும்பு காய்ச்சப்பட்டபோது அக்கினியின் எரிக்குந்தன்மை இரும்பிலும், இரும்பின் உருட்சி நீட்சிமுதலியன அக்கினியிலும் காணப்படுவது போல, சித்தின் ஞானத்தன்மை சித்தத்திலும், சித்தத்தின் ஜடத்தன்மை சித்திலும் காணப்படுகின்றன. (சுஉ)

(அ-கை.) முற்கூறிய பொருளினையே திடமாதற் பொருட்டு மறுபடியும் கூறுகின்றார்:—

वेदवाक्यतः गुरोः सकाशात् अपि सञ्जातविद्यानुभवः तम् उपाधिवर्जितं स्वात्मानं आत्मस्थं निरीक्ष्य आत्मगोचरम् अशेषम् जडम् त्यजेत् ॥

(இ-ள்.) வேதவாக்கியத்தினாலும் குருவினருகிருத்தலாலும் உண்டாகிய ஞானவடிவ ஆத்மாநுபவமுடையவன் அந்த உபாதியின்றிய தனது ஆத்மாவைத் தன் இதயத்திருப்பதாகக் கண்டு (அபரோக்ஷமாயறிந்து) ஆத்மாவின் கண் காணப்படும் சகலஜடத்தினையும் விடவேண்டும் (எ-று.)

வேதவாக்கியத்தினால் என்பதனால் சிரவணமும், குருவினருகிருத்தல் என்றதனால் மனனமும் சொல்லப்பட்டது. உண்டாகிய ஞானசொரூப ஆத்மாநுபவமுடையவன் என்றதனால் செய்யப்பட்ட நிதித்தியாசனமுடையவன் என்பது பொருளாம்.

அதில் உபேக்ஷையாயிருக்க வேண்டுமென்பார் விடவேண்டுமென்றார். (௪௨)

प्रकाशरूपोऽहमजोऽहमद्वयोऽसकृद्विभातोऽहमतीव निर्मलः ।
विशुद्धविज्ञानघनो निरामयः संपूर्ण आनन्दमयोऽहमक्रियः ॥ ४३ ॥

(அ-கை.) ஞேயமான நிருபாதிகசொரூபத்தினை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்:—

अहम् प्रकाशरूपः अहम् अजः अहम् अद्वयः असकृद्विभातः अहम् अतीव निर्मलः अहम् विशुद्धविज्ञानघनः निरामयः संपूर्णः आनन्दमयः अक्रियः ॥

(இ-ள்.) யான் * பிரகாசவடிவன், யான் பிறப்பில்லாதவன், யான் ** அத்வயன், அடிக்கடி யநுபவத்தில் வருபவன், யான் மிக † நிர்மலன், யான் ‡ சுத்தவிஞ்ஞானகனன், $ நிராமயன் (நோயில்லாதவன்), ¶ சம்பூர்ணன் (எங்கும் நிறைந்தவன்), § ஆநந்தமயன், || கிரியையில்லாதவன். எ-று.

வேறு பிரகாசத்தால் விளக்கப்படுவது எப்போதாவது அநுபவத்தில் வருவதாம். அத்தன்மையதல்லாதது ஆத்மாவாகலின் அடிக்கடி அநுபவத்தில் வருபவன் என்றார்.

---

* சுவப்பிரகாசன் அதாவது கடாதிகளைப்போன்ற பரப்பிரகாசிய வடிவமல்லாதவன்.

** ஸஜாதீயாதி துவைதமில்லாதவன்.

† மாயையினுலாகிய ஆவரணவிக்ஷேபமின்றியவன்.

‡ விசுத்தமான ஞான ஏகரஸன்.

$ கர்த்திருத்துவாதி அபிமானமில்லாதவன்.

¶ தேசகாலபரிச்சேதமில்லாதவன்.

§ இன்பவடிவன்.

|| பரிணாமம் (திரிபு) இல்லாதவன்.

सदैव मुक्तोऽहमचिन्त्यशक्तिमानतीन्द्रियज्ञानमविक्रियात्मकः ।
अनन्तपारोऽहमहर्निशं बुधैर्विभावितोऽहं हृदि वेदवादिभिः ॥ ४४ ॥

(அ-கை.) இதுவுமது.

अहम् सदा एव मुक्तः अहम् अचिन्त्यशक्तिमान् अतीन्द्रियज्ञानम् अविक्रियात्मकः अहम् अनन्तपारः अहम् वेदवादिभिः बुधैः अहर्निशम् हृदि विभावितः ॥

(இ-ள்.) யான் எப்போதுமே முக்தன்; யான் சிந்திக்ககூடாத சக்தியுடையவன்; இந்திரியஞானத்திற் கெட்டாதவன்; விகாரமில்லாதவடிவினன்; யான் முடிவின்றிய கரையினன்; யான் வேதவாதிகளாகிய அறிஞர்களால் பகலுமிரவும் உள்ளத்திற் பாவிக்கப்படுவன். (எ-று) (சச.)

एवं सदात्मानमखण्डितात्मना विचारमाणस्य विशुद्धभावना ।
हन्यादविद्यामचिरेण कारकै रसायनं यद्वदुपासितं रुजः ॥ ४५ ॥

(அ-கை.) இப்படிப் பாவித்தலின் பயனைக் கூறுகின்றார்:—

एवम् सदा अखण्डितात्मना विचारमाणस्य विशुद्धभावना (उदेति) यद्वत् उपासितम् रसायनम् रुजः (तथा) कारकैः अविद्याम् अचिरेण हन्यात् ॥

(இ-ள்.) இவ்வாறு எப்போதும் * கண்டிக்கப்படாத சித்தத்தினால் † விசாரிக்கின்றவனுக்கு ‡ விசுத்தபாவனை உதயமாகின்றது. எப்படிக் கொள்ளப்பட்ட ரஸாயனம் (மருந்து) வியாதியைக் கெடுக்கின்றதோ, அதுபோலக் $ காரகங்களோடு அவித்தையினை விரைவில் நாசஞ் செய்கின்றது. (எ-று)

உதயமாகின்றது என்பது சொல்லெச்சம். (௪௫):

विविक्त आसीन उपरतेन्द्रियो विनिर्जितात्मा विमलान्तराशयः ।
विभावयेदेकमनन्यसाधनो विज्ञानदृक्केवल आत्मसंस्थितः ॥ ४६ ॥

(அ-கை.) அங்குத் தியானத்தில் இவ்வாறு செய்ய வேண்டியதாமென்பதைக் கூறுகின்றார் :—

विविक्ते आसीनः उपरतेन्द्रियः विनिर्जितात्मा विमलान्तराशयः विज्ञानदृक् अनन्यसाधनः केवलः आत्मसंस्थितः (सन्) एकम् विभावयेत् ॥

---

* விஷயத்தினால் இழுக்கப்படாத.

† இங்கு விசாரிக்கின்றவன் என்பதற்குத் தியானிக்கிறவன் என்பது பொருள்; தாதுக்களுக்கு அநேகம் பொருளிருத்தலின்.

‡ பிரஹ்மாகார அந்தக்கரணவிருத்தி.

$ வேறு தேகத்தினை யடைவிக்கும் கர்மங்களாம்.

(இ-ள்.) தனியிடத்தி (பதுமாதியாசனங்களி) லிருப்ப வனாய், * இந்திரியநிக்கிரகனாய், (பிராணாயாமாதிகளால்) ஜயிக்கப்பட்ட அந்தக்கரணமுடையவனாய், (இதனால்) பரிசுத்தமான சித்தமுடையவனாய், விஞ்ஞானதிருஷ்டியுடையவனாய், (ஞானத்திற்கு) அந்நியமான சாதனங்களில்லாதவனாய், கேவல(அசங்க)னாய், ஆத்மாவினிடத்திலேயே நிலையுடையவனாய், ஒன்றாகிய பரமாத்மாவைத் தியானிக்கக் கடவன். (எ-று)

ஆத்மாவினிடத்திலேயே நிலையுடையவன் என்றமையால் ஒருபோதாவது வேறு விஷயங்களில் செல்லுஞ் சித்தமில்லாதவனென்பது குறிப்பிக்கப்பட்டது. (சசு)

विश्वं यदेतत्परमात्मदर्शनं विलापयेदात्मनि सर्वकारणे ।
पूर्णश्चिदानन्दमयोऽवतिष्ठते य वेद बाह्यं न च किंचिदान्तरम् ॥४७॥

यत् एतत् परमात्मदर्शनं विश्वम् तत् सर्वकारणे आत्मनि विलापयेत् (सः) पूर्णः चिदानन्दमयः अवतिष्ठते । बाह्यम् न वेद आन्तरम् च किञ्चित् न वेद ॥

(இ-ள்.) யாதொரு இந்தப் பரமாத்மாவினால் பிரகா

* இந்திரியவியாபாரம் நீங்கியவனாய்.

சிக்கப்படும் ஜகத்துளதோ, அதனைச் * சர்வ காரணமான ஆத்மாவினிடத்து ஒடுக்குக. அவன் † பூர்ணனாய்ச் சிதாநந்தமயனாய் நிலைக்கின்றான். வெளிப்பதார்த்தங்களையும் அறியான். உட்பதார்த்தங்கள் எதனையும் அறியான்.(எ-று)

"तस्य भासा सर्वमिदं भाति ॥ அவனுடைய விளக்கத்தால் இவ்வெல்லாம் விளங்குகின்றது." என்னும் சுருதியினால் பரமாத்மாவினால் பிரகாசிக்கப்படும் ஜகத்து என்றார்.

உபாதானசத்தையின்றிக் காரியசத்தையைக் காணலாகாது என்பார் காரணமான ஆத்மாவினிடத்து ஒடுக்குக என்றார்.

எங்கும் பிரஹ்மத்தைக் காணுதலால் உள்ளும் வெளியும் திருசியத்தைக் காண்கிறதில்லை என்பது கருத்து. (சஎ)

पूर्वं समाधेरखिलं विचिंतयेदोंकारमात्रं सचराचरं जगत् ।
तदेव वाच्यं प्रणवो हि वाचको विभाव्यतेऽज्ञानवशान्न बोधतः ॥४८॥

(அ-கை.) சமாதி சித்தித்தற்கு முன் எது செய்ய வேண்டியதோ அதனைக் கூறுகின்றார் :—

---

* மாயைக்குச் சமீபித்திருத்தலால் சர்வோபாதானமாக அபிமானிக்கப்பட்ட.

† சமஸ்தகாமங்களையும் அடைந்தவன் ; அவனுக்கு விரும்பத் தக்கதொன் றின்மையால்.

समाधेः पूर्वम् अखिलम् चराचरम् जगत् ॐकारमात्रम् विचिन्तयेत् ॥

(இ-ள்.) சமாதிக்கு முன் சகல சராசரமான ஜகத்தினையும் ஓங்கார (பிரணவ) மாத்திரமாகச் சிந்திப்பாயாக. (எ-று.)

சகல விஷயாகாரவிருத்திநீக்கத்தினை முன்னிட்ட பிரஹ்மாகாரவிருத்தி சமாதியாம்.

(அ-கை.) அதனையே விரிக்கின்றார் :—

तत् एव वाच्यम् प्रणवः वाचकः अज्ञानवशात् विभाव्यते हि बोधतः न ॥

(இ-ள்.) அச்சகத்தே வாச்சியம் (சொல்லப்படுவது) என்றும், பிரணவம் வாசகம் (சொல்லுவது) என்றும் அஞ்ஞானவசத்தால் பாவிக்கப்படுகின்றது. (இது சாஸ்திரங்களில்) பிரசித்தம். (இப்பாவனை) ஞானத்தினால் (நிர்விசேஷப்பிரஹ்மசாக்ஷாத்காரத்திற்குப் பின்) இல்லை ; (அது எல்லாவிருத்திகளையும் கெடுப்பதாகலின்.) (எ-று.) (சஅ)

अकारसंज्ञः पुरुषो हि विश्वको ह्युकारकस्तैजस ईर्यते क्रमात् ।
प्राज्ञो मकारः परिपठ्यतेऽखिलैः समाधेः पूर्वं न तु तत्त्वतो भवेत् ॥४९॥

(அ-கை.) முற்கூறிய பொருளை விரிக்கின்றார் :—

अखिलः अकारसंज्ञः पुरुषः हि विश्वकः उकारः हि तैजसः क्रमात् ईर्यते मकारः प्राज्ञः परिपठ्यते (इयम् भावना) समाधेः पूर्वम् तत्त्वतः तु न भवेत् ॥

(இ-ள்.) சகல வேதங்களாலும் அகாரப்பெயருடைய புருஷன் நிச்சயமாக * விசுவ னென்றும், உகாரப்பெயருடையவன் நிச்சயமாக † தைஜஸ னென்றும் கிரமமாகச் சொல்லப்படுகின்றான். மகாரப்பெயருடையவன் ‡ பிராஞ்ஞனென்று சொல்லப்படுகின்றான். (இப்பாவனை) சமாதிக்கு முன்னும்; தத்துவசாக்ஷாத்காரத்தில் இல்லை. (எ-று.)

யாவும் பிரஹ்மத்தில் ஒடுங்குதலால் தத்துவசாக்ஷாத்காரத்தில் இல்லை யென்றார். (சக)

विश्वं त्वकारं पुरुषं विलापयेदुकारमध्ये बहुधा व्यवास्थितम् ।
ततो मकारे प्रविलाप्य तैजसं द्वितीयवर्णं प्रणवस्य चान्तिमे ॥५०॥

---

* விசுவ னென்னும் சொல்லால் அகாரவாச்சியமான இந்த ஜாக்கிரசாக்ஷியாகிய விராட்டு சொல்லப்படுகின்றான்.

† தைஜஸ னென்னும் சொல்லால் உகாரவாச்சியமான இலிங்கதேகாபிமானி இரணியகர்ப்பன் சொல்லப்படுகின்றான்.

‡ பிராஞ்ஞ னென்னும் சொல்லால் மகாரவாச்சியமான மாயோபாதிகன் சொல்லப்படுகின்றான்.

(அ-கை:) இனி ஒடுக்கும் முறையினை இரண்டு சுலோலோகங்களாற் கூறுகின்றார் :—

बहुधा व्यवस्थितम् विश्वम् पुरुषम् अकारं तु उकारमध्ये विलापयेत् ततः अन्तिमे मकारे तैजसम् प्रणवस्य द्वितीयवर्णम् च प्रविलाप्य ॥

(இ-ள்.) அநேகவிதமாக * நிலைத்துள்ள விசுவனாகிய புருஷனையும் அகாரத்தையும் உகாரத்தில் ஒடுக்குக. அதன்பின் கடைசியான மகாரத்தில் தைஜஸனையும் பிரணவத்தின் இரண்டாவது வர்ண(அக்ஷர)மான உகாரத்தினையும் ஒடுக்கி.

(எ-று.)

मकारमप्यात्मनि चिद्घने परे विलापयेत्प्राज्ञमपीह कारणम् ।
सोऽहं परं ब्रह्म सदा विमुक्तिमद्विज्ञानदृङ्मुक्त उपाधितोऽमलः ॥ ६१ ॥

(அ-கை.) இதுவுமது.

मकारम् अपि कारणम् प्राज्ञम् अपि इह चिद्घने परे आत्मनि विलापयेत् (ततः) विज्ञानदृक् उपाधितः मुक्तः अमलः सः अहम् सदा विमुक्तिमत् परं ब्रह्म ( इति भावयेत् ) ॥

---

* ஸ்தூலதேகாபிமானத்தால் நிலைத்துள்ள.

† இலிங்கதேகாபிமானியாகிய புருஷனை.

(இ-ள்) மகாரத்தினையும் * காரணமாகிய பிராஞ்ஞனையும் இங்குச் சித்கனமான பரமாகிய ஆத்மாவில் ஒடுக்குக. அதன்பின் விஞ்ஞானதிருஷ்டியுடையவனும், உபாதியினின்றும் விடுபட்டவனும், அமலனுமாகிய அவன் யான்; எப்போதும் முக்தியுடைய பரப்பிரஹ்மமாயிருக்கின்றேன் என்று பாவிக்கக்கடவன். (எ-று.) (ருக)

एवं सदा जातपरात्मभावनः स्वानन्दतुष्टः परिविस्मृताखिलः।
आस्ते स नित्यात्मसुखप्रकाशकः साक्षाद्विमुक्तोऽचलवारिसिन्धुवत्॥५२॥

(அ-கை.) இப்படிப் பாவிப்பவனது லக்ஷணத்தைக் கூறுகின்றார்:—

एवम् सदा जातपरमात्मभावनः परिविस्मृताखिलः स्वानन्दतुष्टः नित्यात्मसुखप्रकशकः सः विमुक्तः (सन्) अचलवारिसिन्धुवत् आस्ते ॥

(இ-ள்.) இவ்வாறு எப்போதும் உண்டாகிய பரமாத்மபாவனையுடையவனும், (புத்திரதேகாதிகள்) எல்லாவற்றையும் மறந்தவனும், (இதனாலேயே) † நிஜாநந்தமாத்திரத்தினால் சந்தோஷமுடையவனும், சாக்ஷாத் (பிரத்தியக்ஷ) நித்

* காரணத்தன்மையபிமானமுடைய புருஷனை.

† சுவசொரூபாநந்தமாத்திரத்தினால்.

தியாத்மசுகப்ரகாசமுடையவனுமாகிய அவன் விமுக்தனாய் (ஜீவன்முக்தனாய்) * அசைவற்ற நீரினையுடைய சமுத்திரம்போல் இருக்கின்றான். (எ-று).

நிஜாநந்தமாத்திரத்தினால் சந்தோஷமுடையவன் என்றதனால் விஷயாநந்தத்தினால் சந்தோஷமுடைய வனல்லன்; அது பரிணாமத்தில் துக்கரூபமா யிருத்தலால், அதனினின்றும் விரக்தனா மென்னும் பொருள் சித்தித்தது.

விஷயசம்பந்தவடிவ அலையில்லாதவனாய் இருக்கின்றான் என்பது பொருள். (நிஉ)

एवं सदाऽभ्यस्तसमाधियोगिनो निवृत्तसर्वेन्द्रियगोचरस्य हि ।
विनिर्जिताशेषरिपोरहं सदा दृश्यो भवेयं जितषड्गुणात्मनः ॥ ५२ ॥

(அ-கை.) இப்படிப்பட்டவனுக்கு என்னுடைய அடைவு உண்டாகவே செய்கின்றது என்று கூறுகின்றார்:—

एवं सदा अभ्यस्तसमाधियोगिनः निवृत्तसर्वेंद्रियगोचरस्य विनिर्जिताशेषरिपोः जितषड्गुणात्मनः अहम् सदा दृश्यः भवेयम् ॥

(இ-ள்.) இவ்வாறு எப்போதும் அப்பியசிக்கப்பட்ட

* அலையின்றிய.

சமாதியினையுடையயோகியும், நீங்கிய சர்வேந்திரியவிஷயங் (சப்தாதி)களையுடையவனும், சகல ‡ சத்துருக்(காமாதி) ளையும் ஜயித்தவனும், ஆறுகுணங்களையுடைய ஆத்மாவை வசஞ்செய்தவனுமான, புருஷனுக்கு யான் திருசிய (காணப் படுபவ) னாகின்றேன். (எ-று.)

இதனால் என் பக்தனாகிய யோகிக்கே யான் திருசியன், மற்றப்பக்திவிமுகனுக்கு ஆகேன் என்பது குறிக்கப்பட் டது.

அறுகுணங்களாவன:—க. சர்வஞ்ஞத்துவம் (முற்றறி வுடைமை), உ. நித்தியத்தன்மை, ந. நித்தியத்திருப்தத்து வம், (என்றும் திருப்தியுடையனாதல்), ச. ஞானவடிவத் தன்மை, ரு. சுவதந்திரத்தன்மை, சு. என்றும் விளங்குதல் என்பன.

ध्यात्वैवमात्मानमहर्निशं मुनिस्तिष्ठेत्सदा मुक्तसमस्तबन्धनः ।
प्रारब्धमश्नन्नभिमानवर्जितो मय्येव साक्षात्प्रविलीयते ततः ॥ ५४ ॥

(அ-கை.) இப்படிப்பட்ட ஜீவன்முக்தன் பிராரப்த வசத்தினால் அபிமானமில்லாதவனாய்ப் போகங்களைப் புசித் துக்கொண்டிருப்பான்; அதன்பின் என்னிடத்திலேயே

* இதனால் விஷயங்களில் அந்தக்கரணம் பிரவிருத்தியாமை சூசிப்பிக்கப்பட்டது.

லயமாகின்ருன் ; என் வடிவமாகின்ருன் என்று கூறு கின்ருர் :—

एवं मुनिः आत्मानम् अहर्निशम् ध्यात्वा सदा मुक्तसमस्तबंधनः (सन्) तिष्ठेत् ततः अभिमानवर्जितः प्रारब्धम् अश्नन् साक्षात् मयि एव प्रविलीयते ॥

(இ-ள்.) இப்படி முனி (மனனஞ்செய்வோன்) ஆத்மாவைப் பகலும் இரவும் தியானித்து, எப்போதும் சகல பந்தங்களும் நீங்கப்பெற்றவனுய் நிற்பன். அதன்பின் அபிமானமில்லாதவனுய்ப் பிராரப்தத்தினைப் புசித்துக்கொண்டு சாக்ஷாத் என்னிடத்திலேயே ஒடுங்குகின்ருன். (எ-று) (ருச)

आदौ च मध्ये च तथैव चान्ततो भवं विदित्वा भवशोककारणम् ।
हित्वा समस्तं विधिवादचोदितं भजेत्स्वमात्मानमथाखिलात्मनाम्॥५९॥

(அ-கை.) எல்லாத்தர்மங்களையும் விட இந்தத் தர்மமே மேலானதென்று கூறுகின்ருர் :—

भवम् आदौ मध्ये तथा एव अन्ततः च भयशोककारणम् विदित्वा विधिवादचोदितम् समस्तम् हित्वा च अथ अखिलात्मनाम् स्वम् आत्मानम् भजेत् ॥

(இ-ள்.) பவ(சம்சார)த்தினை ஆதியிலும் மத்தியிலும் அப்படியே முடிவிலும் பயசோகங்கட்குக் காரணமென் றுணர்ந்து, * விதிவாக்கியங்களால் (செய்யத்தக்கனவாக) அறிவிக்கப்பட்ட (கர்மமார்க்ககாமியங்கள்) எல்லாவற்றையும் விட்டு, பின் எல்லா சொரூபமுமான தனது ஆத்மாவினை (பரமேசுவரனை)ப் பஜிக்கக்கடவன். (எ-று)

எப்படித் தனத்தைச் சம்பாதித்தலால் ஆதியில் துக்கமும், மத்தியில் அதனைக் காத்தலில் துன்பமும் அங்கு அரசன்முதலியோராலாகிய பயமும், முடிவில் (நாசத்தில்) சோக விறுதியான துக்கமும் உண்டாகின்றனவோ அது போலப் பதார்த்தங்க ளெல்லாவற்றிலும் காணத்தக்கதாம்.

आत्मन्यभेदेन विभावयन्निदं भवत्यभेदेन मयात्मना तदा ।
यथा जलं वारिनिधौ यथा पयः क्षीरे वियद्व्योम्न्यनिले यथानिलः ॥५६॥

(அ-கை.) என்னிடத்தில் அபேதபாவனையினால் நாமரூபப் பிரிவில்லாமல் என் வடிவமே யாகின்றான் என்னும் இப்பொருளைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார் :—

यदा आत्मनि इदम् अभेदेन विभावयन् (तिष्ठति) तदा यथा

---

*स्वर्गकामो यजेत—சுவர்க்கத்தை விரும்பியவன் யஜிக்கக்கடவன் என்றல்முதலிய.

वारिनिधौ जलम् यथा क्षीरे पयः व्योम्नि वियत् यथा आनिले आनिलः (तथा) आत्मना मया अभेदेन भवति ॥

(இ-ள்.) எப்போது * ஆத்மாவினிடத்தில் இதனைச் (சுவசொரூபமான ஜீவனை) அபேதமாய்ச் சிந்தித்து (நிற்கின்றானோ), அப்போது எப்படிச் சமுத்திரத்தில் ஜலமும், எப்படிப் பாலில் பாலும், ஆகாயத்தில் ஆகாயமும், எப்படி வாயுவில் வாயுவும் அபேதமாமோ, அதுபோல ஆத்மாவா (பரமேசுவரனா)கிய என்னோடு அபேத மாகின்றான். (எ-று.)

எப்படிச் சமுத்திரத்தில் பிரவேசித்த ஆறுமுதலியவற்றின் ஜலம் சமுத்திரமே யாகின்றதோ, எப்படிப் பசுமுதலியவற்றின் பாலில் சேர்க்கப்பட்ட பால் பாலே யாகின்றதோ, எப்படிக் கடமுடைந்தகாலத்துக் கடாகாயம் மகாகாயத்தில் சேர்ந்து மகாகாயமே யாகின்றதோ, எப்படித் துருத்திமுதலியவற்றில் அடைபட்ட வாயு மகாவாயுவிற் சேர்ந்து பலவடிவமான பிரிவின்றி ஒருவடிவ மாகின்றதோ, அதுபோல என்னோடு ஒருமைப்படுகின்றான் என்பது பொருள். (ருசு)

इत्थं यदीक्षते हि लोकसंस्थितो जगन्मृषैवेति विभावयन्मुनिः ।
निराकृतत्वाच्छ्रुतियुक्तिमानतो यथेन्दुभेदो दिशि दिग्भ्रमादयः ॥५७॥

---

* சர்வாதிஷ்டானமாகிய என்னிடத்தில்.

(அ-கை.) இவ்வாறு ஆத்மதத்துவ முணர்ந்தவனுக்கு ஜகத்தின் சத்தியத்தன்மைமயக்கம் தானே நீங்குகின்றது என்று கூறுகின்றார் :—

लोकसंस्थितः हि मुनिः जगत् मृषा एव इति विभावयन् इत्थम् यदि ईक्षते (तदा) यथा इन्दुभेदः दिशिदिग्भ्रमादयः (तथा) श्रुति-युक्तिमानतः निराकृतत्वात् (निवृत्तजगत्सत्यत्वभ्रमः) (भवति) ॥

(இ-ள்.) உலகத்தி லிருப்பவனாயினும் முனி (ஞானி) ஜகத்துப் பொய்யே என்று பாவிப்பவனாய், இவ்வாறு * பார்ப்பானாயின் (அப்போது) சந்திரன்வேற்றுமையும், திசைமயக்கமுதலியனவும் எப்படியோ, அதுபோலச் சுருதியுக்திகளாகிய பிரமாணங்களால் நிராகரிக்கப்பட்டதன்மை யிருத்தலால் ஜகத்தின் சத்தியத்தன்மைப்பிரமம் நீங்கியவனாகின்றான். (எ-று.)

ஜீவன்முக்திதசையில் பிராரப்தவசத்தால் லோகவியவகாரத்தைச் செய்பவனாயினும் என்பார் உலகத்திருப்பவனாயினும் என்றார்.

இங்கு "अतोऽयमन्यदार्तम्- ஆத்மாவிற்கு அந்நியமானயாவும் மித்தையாம்." என்னும் சுருதியும், " ஜகத்து மித்

* ஐக்கியத்தை அறிவானாயின்.

ஷை; திருசியமா யிருத்தலால், சுத்திரஜதம்போல." என்னும் அநுமானவடிவயுக்தியும் பிரமாணங்களாம்.

ஒரு சந்திரனிடத்தில் இரண்டுசந்திர னென்னுந்தன்மை பிரமமாம். அது ஒருமை (சந்திரன் ஒன்றே)யென்னும் உணர்ச்சியால் நீங்குகின்றது. கிழக்குமுதலிய திக்குகளில் மேற்குமுதலிய திக்கா மென்னும் மயக்க முண்டாகின்றது, அதுவும் உண்மையுணர்தலால் நீங்குகின்றது. இப்படியே தானைச் சுற்றுகின்ற புருஷனுக்குத் திக்குகளில் சுழல்தலாகிய மயக்கமும், சமீபத்திருக்கும் விருக்ஷமுதலியவற்றில் சுழலுதற்பிரமமும் உண்டாகின்றன. அவை அவற்றின் அசைவின்மையுணர்ச்சியால் நீங்குகின்றன. அதுபோலத் தத்துவவுணர்ச்சியால் ஜகத்தின் சத்தியத்தன்மைப்பிரமம் நீங்குகின்றது என்பது பொருள். (ருள)

यावन्न पश्येदखिलं मदात्मकं तावन्मदाराधनतत्परो भवेत् ।
श्रद्धालुरत्यूर्जितभक्तिलक्षणो यस्तस्य दृश्योऽहमहर्निशं हृदि ॥ ५८ ॥

(அ-கை.) இப்படிப்பட்ட ஞானத்தில் என் ஆராதனமே உபாயமா மென்று கூறுகின்றார்:—

यावत् अखिलम् मदात्मकम् न पश्येत् तावत् मदाराधनतत्परः भवेत् यः श्रद्धालुः अत्यूर्जितभक्तिलक्षणः (भवेत्) तस्य हृदि अहं अहर्निशम् दृश्यः ॥

(இ-ள்.) எதுவரையில் எல்லாவற்றையும் என்வடிவமே (என்னிடத்து விவர்த்தவடிவினதெ)ன்று காணவில்லையோ, அதுவரையில் (என்னை யடைதற்பொருட்டு) என் ஆராதனதற்பரனாய் இருக்கக்கடவன். எவன் * சிரத்தையுடையவனாய் மிகவிருத்தியடைந்த பக்தியடையாளங்களை யுடையவனாகின்றானோ, அவனுடைய இருதயத்தில் யான் பகலும் இரவும் திருசிய(காணப்படுபவ)னாகின்றேன். (எ-று.)

பகவதாராதனமே ஞானத்தை யடைவிப்பதாமென்று இதில் திடமான விசுவாசமுடையவனைச் சிரத்தையுடையவனென்றார்.

"ये यथा मां प्रपद्यंते तांस्तथैव भजाम्यहम्– யார் எப்படி என்னை ஆராதிக்கின்றார்களோ அவர்களை அவ்விதமாகவே யடைகின்றேன்." என்னும் ஸ்மிருதியும் யான் திருசிய மாகின்றேன் என்பதில் பிரமாணமாம். (ருஅ)

रहस्यमेतच्छ्रुतिसारसंग्रहं मया विनिश्चित्य तवोदितं प्रिय ।
यस्त्वेतदालोचयतीह बुद्धिमान्स मुच्यते पातकराशिभिः क्षणात् ॥ ५९ ॥

(அ-கை.) தாம் கூறிய வாக்கியங்கட்குச் சுருதிசம்மதத்துவம் கூறி, இதனை விசாரித்தலும் என் ஆராதனத்திற்குப் பிரதிபந்தகமாயுள்ள பாபத்துவம்ஸத்திற்கு உபாயமாமென்று கூறுகின்றார் :—

प्रिय श्रुतिसारसंग्रहम् विनिश्चित्य एतत् रहस्यम् मया तव उदितम् यः बुद्धिमान् इह एतत् आलोचयति सः पातकराशिभिः क्षणात् मुच्यते ॥

(இ-ள்) பிரியனே! (லக்ஷ்மணா!) சுருதிசாரசங்கிரகத்தினை நிச்சயித்து இந்த இரகசியம் என்னால் உனக்குச் சொல்லப்பட்டது. எந்தப் புத்திமான் இதனை (இவ்விரகசியத்தினை) ஆலோசி(செவ்வையாய் விசாரி)க்கின்றானோ, அவன் பாதகக்கூட்டங்களினின்றும் கணத்தில் விடுபடுகின்றான். (எ-று)

சுருதிசாரசங்கிரகமென்றமையால் மிக ரகசியமாய் வைக்கத்தக்கதன்மையும், அப்பிரமாணமாமென்னும் சங்கைவடிவ களங்கமின்மையும் குறிப்பிக்கப்பட்டது. (ருகூ)

भ्रातर्यदीदं परिदृश्यते जगन्मायैव सर्वं परिहृत्य चेतसा ।
मद्भावनाभावितशुद्धमानसः सुखी भवानन्दमयो निरामयः ॥ ६० ॥

(அ-கை.) இப்போது பகவான் முற்கூறிய அர்த்தத்தினையே திடமாகுதற்பொருட்டுச் சுருக்கமாகக் கூறி ஆசீர்வதிக்கின்றார் :—

भ्रातः यदि इदम् जगत् परिदृश्यते तत् माया एव (इति ज्ञात्वा)

चेतसा सर्वम् परिहृत्य मद्भावनाभावितशुद्धमानसः तिष्ठ ॥
निरामयः सुखी आनन्दमयः भव ॥

(இ-ள்) தம்பி! (நீ) யாதொரு இந்த ஜகத்து காணப்படுகின்றதோ அது (முழுவதும்) மாயையே (என்றறிந்து), சித்தத்தினால் எல்லாவற்றினையும் * நீக்கி, என்னைச் சிந்தித்தலால் சுத்தமாகிய மனதையுடையவனாய் இருப்பாயாக; நிராமயனாய் (துக்கமற்றவனாய்)ச் சுகியும் ஆநந்தசொரூபனுமாவாய். (எ-று.)

முன்னமே ஆநந்தசொரூபம் உள்ளதேயாம். ஆயினும் இப்போது அதன் அடைவு மறந்த கழுத்தாபரணத்தினது அடைவுபோலாம்.

यः सेवते मामगुणं गुणात्परं हृदा कदा वा यदि वा गुणात्मकम् ।
सोऽहं स्वपादाञ्चितरेणुभिः स्पृशन् पुनाति लोकत्रितयं यथा रविः ॥ ६१ ॥

(அ-கை.) இவ்விதமாகத் தனது உபாசகனுக்குள்ள உலகத்தைப் பாவனஞ்செய்யுந்தன்மையினைக் கூறுகின்றார்:—

* அவற்றில் உதாசீனத்தன்மையைச் செய்து.

यः कदा वा हृदा अगुणम् गुणात् परम् यदि वा गुणात्मकम् माम् उपासते सः अहम् । (सः) स्वपादाञ्चितरेणुभिः स्पृशन् यथा रविः तथा लोकत्रितयम् पुनाति ॥

(இ-ள்.) எவன் எப்பொழுதாயினும் இதயத்தினல் (நிர்மலாந்தக்கரணத்தினல்) முக்குணமில்லாதவனும் குணங்களுக்கு (அவ்வியக்தத்திற்கு) அப்பாற்பட்டவனும் அல்லது (சர்வஞ்ஞத்துவமுதலிய, உலகத்திலில்லாத அழகுமுதலிய) குணவடிவினனுகிய என்னை உபாசிக்கின்றனோ அவன் யான் (என்வடிவமாகின்றுன்). (அவன்) தனது பாதங்களிற்பற்றிய துகள்களால் ஸ்பரிசிக்கின்றவனுய்ச் சூரியன் எப்படியோ அப்படி மூன்றுலகத்தினையும் புனிதமாக்குகின்றுன். (எ-று)

சூரியன் தனது கிரணங்களால் உலகத்தினை இருளில்லாததாக்குவதுபோல, தன்பாதரேணுக்களால் அஞ்ஞானவிருளை நீக்குதலால் பவித்திர மாக்குகின்றுன் என்பது பொருள். (சாக)

विज्ञानमेतदखिलं श्रुतिसारमेकं वेदान्तवेद्यचरणेन मयैव गीतम् ।
यः श्रद्धया परिपठेद्गुरुभक्तियुक्तो मद्रूपमेति यदि मद्वचनेषु भक्तिः ।६२।

(அ-கை.) இப்போது இந்நூற்பொருளினை விசாரிக்கும் சாமர்த்திய முடையவனுக்குப் படித்தல்மாத்திரத்தினுலும் பெரும்பயனுண் டென்பதனைக் கூறுகின்றூர் :—

यः गुरुभक्तियुक्तः अखिलश्रुतिसारम् एकम् वेदान्तवेद्यचरणेन मया गीतम् एतत् विज्ञानम् श्रद्धया परिपठेत् (सः) यदि मद्वचनेषु भक्तिः मद्रूपम् एति ॥

(இ-ள்.) எவன் குருபக்தியோடு கூடியவனுய், சகல சுருதிகளின் சாரமானதும், முக்கியமானதும், வேதாங்கங்களால் அறியத்தக்க (ஜகத்தின் ஜன்மாதி கிருத்தியங்களான) சரித்திரமுடையவனுகிய என்னுல் சொல்லப்பட்டதுமான இந்த *விஞ்ஞான(ஞானசாஸ்திர)த்தைச் சிரத்தையோடு படிக்கின்ருனே, அவனுக்கு என்வாக்கியங்களில் பக்தி இருக்குமாயின் எனது வடிவத்தை அடைகின்ருன்.(எ-று.)

படித்தல்மாத்திரத்தினுல் இப்படிப்பட்ட பெரும் பயன் எவ்வா றுண்டாமென்னும் ஆசங்கையைப் பரிகரித்

---

* இங்கு விஞ்ஞானத்தை யுண்டுபண்ணும் சாஸ்திரத்தை விஞ்ஞான மென்றது ஆகுபெயராலாம்.

தற்பொருட்டுச் சிரத்தையோடு படிக்கின்றனோ என்றார். (கூஉ)

வாழி யிராகவன் வாழி யிலக்மணன்
வாழி நல்வாத ராயண மாமுனி
வாழி யிக்கீதை மாநிலத் தென்றுமே
வாழி யோதுவார் வாழி வாழியே.

இவ்வாறு உமாமகேசுவரசம்வாதமான ஸ்ரீமத் அத்தி
யாத்மராமாயணத்தின் உத்தரகாண்டத்துள்ள

ஸ்ரீ ராமகீதை யென்னும்

ஐந்தாம் சர்க்கம்.

முடிந்தது.

---



உ

# ஸ்ரீபஞ்சதசி.

## [பஞ்சதசப்பிரகாணம்]

ஸ்ரீ பஞ்சதசி யென்பது சதுர்வேதபாஷ்யம் சர்வதரிசனசங்கிரகமுதலிய அநேக கிரந்தங்களை இயற்றியவரும், சர்வஞ்ஞவித்துவத்சிரோமணியென உலகப்பிரசித்திபெற்றவருமான ஸ்ரீ வித்தியாரண்ணியஸ்வாமிகளால் ஸ்ரீ காயத்திரிதேவியின் வரத்தால் அருளிச்செய்யப்பட்டது. இதற்குத் தஞ்சைமாநகரம் ஸ்ரீமான் வே. குப்புஸ்வாமிராஜா அவர்கள், சிறிது சம்ஸ்கிருதமும் தமிழும் உணர்ந்தவர்களும் தமிழ்மாத்திரமுணர்ந்தவர்களுமாகிய இருதிற முமுக்ஷுக்களுக்கும் உபயோகப்படுமாறு அந்நூலிற்கு மூலசுலோகங்களின் பேரில் ஓர் பொழிப்புரையும், ஸ்ரீவித்தியாரணியசுவாமிகளின் சிஷ்யரான ஸ்ரீராமகிருஷ்ணபண்டிதர் அவர்களது சம்ஸ்கிருத வியாக்கியானத்திற்குச் சரியான மொழிபெயர்ப்புவடிவஉரையும், அவ்வுரைகளுக்கு அங்கங்கே வேண்டியவிடத்துப் பிரஹ்மநிஷ்டபண்டித ஸ்ரீபீதாம்பரஜீ அவர்களால் செய்யப்பட்ட டிப்பணியையும் மற்றும் பலவுரையாசிரியர்கள் கருத்துக்களையும் அநுசரித்த ஓர் விளக்கவுரையும் எழுதப்பட்டுளது. இவ்வுரையில் மூலசுலோகம் சம்ஸ்கிருதவியாக்கியானம் இரண்டிலுமுள்ள விஷயங்களினும் வெகு மடங்கதிகமாகத் தெரியத்தக்க விஷயங்களிருப்பதோடு ஆங்காங்கு உதாரணமாகக் காட்டப்பட்ட சம்ஸ்கிருத சுருதி சூத்திரம் சுலோகமுதலியவற்றிற்குத் தமிழுரையும் எழுதப்பட்டுளது.

இத்தமிழ்ப் பஞ்சதசியை வாசிப்பவர்கள் மற்ற எந்தநூலின் உதவியுமில்லாமல் அத்வைதவுண்மையினையும் அதன் சகல சாதனங்களையும் செவ்வையாத்தெரிவதனோடு இதராவாதிகளாற் கலங்காதிருந்து தாம் பிறர்சப்சயங்களை யொழிப்பதிற் சமர்த்தருமாவர் என்பதற் கையமில்லை.

இவ்வரிய பெரிய நூலை நல்ல காகிதத்தில் சுத்தமாய்ப் பதிப்பித்து மனோரம்மியமான வர்ணமைமுதலியவற்றாலாகிய நேர்த்தியான சித்திரகோசமொன் றமைத்து, ஸ்ரீ ஆதிசங்கராசிரியரவர்கள் உருவமைந்த புகைப்படத்துடன், இவ்வுரையாசிரியராசியர் புகைப்படமும், உரையாசிரியர் புகைப்படமும் வைத்து இராயல் 50 பவுண்டு பேப்பரில் ராயல் 8பக்க அளவுள்ள 1452-பக்கங்களுள்ள 2புஸ்தகங்களாக்கி வெளிப்படுத்தியிருக்கின்றோம். இதன் விலை ரூ 10—0—0 தபாற்கூலி 0—15—0.

---

இந்நூலாசிரியர் இயற்றியவைகளில் இப்பொழுது விற்பனைக்குத் தயாராயுள்ள புத்தகங்கள்.

| | ரூ. அ. பை. |
|---|---|
| ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் ... | 4—0—0 |
| ஸ்ரீ விசாரசாகரம் ... | 3—0—0 |
| ஹடயோகப்பிரதீபிகை ... | 1—8—0 |
| ஸ்ரீ பாலபோதம் ... | 1—0—0 |
| ஸ்ரீ விருத்திரத்நாவலி ... | 0—12—0 |
| விவேகசிந்தாமணி (வேதாந்தபரிச்சேதம்) ... | 0—6—0 |
| சங்கரகிரந்தாவலி பு-க. அபரோக்ஷாநுபூதி சம்ஸ்கிருதசுலோகமும் தமிழுரையும் ... | 0—6—0 |
| தர்க்ககௌமுதியும் நியாயபதார்த்தம் 16-ன் இலக்ஷணங்களும் (குறிப்புரையுடன் 2-ம் பதிப்பு) ... | 0—6—0 |
| கீதைக்கொத்து பு-க. உத்தரகீதை (சம்ஸ்கிருதசுலோகமும் தமிழுரையும்) .. | 0—4—0 |
| சாந்தோக்கியத்துள்ள தத்துவமஸிமகாவாக்கிய உபதேசம், சுகரகஸ்யோபநிஷதத்துள்ள நான்குமகாவாக்கியார்த்தத்துடன் 2 ம் பதிப்பு ... | 0—2—0 |
| ஸ்ரீ விசாரசந்திரோதயம் 2-ம்பதிப்பு அநேக சுருதிப்பிரமாணங்களுடன் கூடியசீக்கிரத்தில் வெளியாய்விடும். முன்பதிப்பினும் விசேஷமாக்கப்பட்டது ... | 1—4—0 |

# பிறர் பதிப்பு.

| | | |
|---|---|---|
| தலயாத்திரைப் பொதுவிதி | ... | 0—6—0 |
| திருவள்ளுவர்சரித்திரம் | ... | 0—1—6 |
| அகம்புறவாராய்ச்சிவிளக்கம் | ... | 1—4—0 |
| அவதூதசம்வாதம் | ... | 0—2—0 |
| கிருஷ்ணன்செய்திருப்புகழ் | ... | 0—1—0 |
| அழுகணிச்சித்தர்பாடல் கிளாஸ் திக்பேபர் | ... | 0—0—6 |
| தேவாரத்திரட்டு, N. கண்ணுசாமிபிள்ளையால்போடப்பட்ட 5-வது சுத்தப்பதிப்பு கிளேஸ் திக்கு | ... | 0—4—0 |
| ஷை சின்ன தேவாரத்திரட்டு | ... | 0—1—0 |
| ஆசாரக்கோவையுரை | ... | 0—2—0 |
| ஆசாரத்திரட்டு | ... | 0—4—0 |
| இந்துபாகசாஸ்திரம் | ... | 0—8—0 |
| இனியது நாற்பது உரை | ... | 0—3—0 |
| ஏரெழுபது திருக்கைவழக்கம் | ... | 0—4—0 |
| ஐந்திணை ஐம்பது உரை | ... | 0—3—0 |
| சிதம்பரமகாத்மியம் (கிரந்தம்) | ... | 0—1—0 |
| சிவதத்துவவிவேகம் ஷை | ... | 1—8—0 |
| சைவமஞ்சரி | .. | 1—8—0 |
| ஞானமிருதம் | ... | 1—0—0 |
| சுவாநுபூதிரஸாயனம், சுவாநுபவரஸமஞ்சரீ, நிஜாநந்த விலாஸம் ஒரு கட்டடம் | ... | 2—0—0 |
| ஸ்ரீ மகாபாரத அம்மானை 2-வது பாகம் | .. | 1—4—0 |
| ஞானயிபோதம் | ... | 0—1—0 |
| திரிகடுகம் உரை | ... | 0—2—0 |
| துலாக்காவேரிமான்மியம் | ... | 0—8—0 |
| நாநாஜீவவாதக்கட்டளை (ஆந்தரார்த்தப்பிரகாசிகை) | ... | 0—2—0 |
| ஷை அவதாரிகை | ... | 0—2—0 |
| ஷை குறிப்புரை | ... | 0—4—0 |
| ஷை விருத்தியுரை | ... | 1—8—0 |

| | | |
|---|---|---|
| ஷை செய்யுள் | ... | 0—1—0 |
| நான்மணிக்கடிகையுரை | ... | 0—3—0 |
| சுந்தரராஜா (நாவல்) | ... | 0—8—0 |
| பக்தலீலாமிர்தம் செய்யுள் | ... | 2—0—0 |
| ஷை வசனம் | ... | 3—0—0 |
| பஞ்சபக்ஷிசாஸ்திரசந்திரிகை | ... | 0—4—0 |
| புலவராற்றுப்படை | ... | 0—3—0 |
| மகாபாரதம்(ஆதிபர்வம், சபாபர்வம்) | ... | 1—0—0 |
| மநுதர்மசாஸ்திரமூலமும் தமிழுரையும் | ... | 2—8—0 |
| யாப்பிலக்கணம் அணியிலக்கணம் | .. | 0—8—0 |
| மகாமகமகத்துவம் | ... | 0—6—0 |
| அற்புதத்தேவாரத்திரட்டு | ... | 0—3—0 |
| பகவத்கீதை திக்கு | ... | 1—4—0 |
| வேதாந்தம் பிரஹ்மசூத்திரம் சங்கராராமாநுஜபாஷ்யம் பிரதிபததாற்பரியம் | ... | 3—0—0 |
| ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள்படம் | ... | 0—1—0 |
| விபூதிமகாத்மியம் | ... | 0—0—9 |
| வேதாந்தசாரம் வினாவிடை | ... | 0-10—0 |
| ஜோதிடப்பிரபஞ்சசேகரம் | ... | 0-12—0 |
| நேமிநாதம் உரை | ... | 0-10—0 |
| விபூதிருத்திராக்ஷதாரணம் | ... | 0-14—0 |
| சிவக்ஷேத்திரயாத்திராநுகூலம் | ... | 0-10—0 |
| அநவத்யா | ... | 0—0—6 |
| தாயுமானவர் மூலம் சுத்தப்பதிப்பு (பாக்கெட்சைஸ்) | ... | 0—8—0 |
| திருக்குறள் மூலம் பரிமேலழகருரை, தெளிபொருள் விளக்கப்பதவுரை, குறிப்புரைகளுடன் | .. | 6—0—0 |
| திலோத்தமா | ... | 0—0—6 |
| நாமராமாயணம் | ... | 0—0—6 |
| ராமாயணசூர்ணிகை | ... | 0—0—6 |
| ஷை (சம்ஸ்கிருதம்) | ... | 0—0—9 |
| காயத்திரிராமாயணம் (சம்ஸ்கிருதம்) | .... | 0—0—6 |

| | | |
|---|---|---|
| பாரதசங்கிரகம் (ஸம்ஸ்கிருதம்) | ... | 0-12—0 |
| பிருந்தை | ... | 0—0-6 |
| நாராயணஸ்தோத்திரம் (ஸம்ஸ்கிருதம்) | ... | 0—0-3 |
| பிரஹ்மநாமாவளி (ஸம்ஸ்கிருதம்) | ... | 0-0—3 |
| நீதிகதை (விசுவநாதீயம்) | ... | 0—0—6 |
| ரிபுகீதை | ... | 2—8—0 |
| பகவத்கீதை வசனம் | ... | 1—4—0 |
| தர்க்கபரிபாஷை குறிப்புரையுடன் | ... | 1—0—0 |
| சித்தாந்தபிந்து (வேதாந்தம்) | ... | 0-10—0 |
| ரிபுகீதைத்திரட்டு (குறிப்புரையுடன்) | .. | 1—0—0 |
| திருவாசகம் (சுத்தப்பதிப்பு பாக்கெட்சைஸ்) | ... | 0-10—0 |
| ஷை மற்றோர் பதிப்பு | ... | 1—0—0 |
| வாக்கியசுதையென்னும் திருக்குத்திருசியவிவேகம் தமிழ் மூலமும் உரையும் | ... | 0—2—0 |
| வேதாந்தபரிபாஷை (தமிழ்) | .. | 0-10—0 |
| பாட்டியற்கொத்து | ... | 0—6—0 |
| தாலாட்டுப்பிரபந்தம் | ... | 0—4—0 |
| சிவராத்திரிமான்மியம் | ... | 0—4—0 |
| நித்தியாநுசந்தானப்பிரதிபததாற்பரியம் | ... | 1—8—0 |
| சந்தியாவந்தனபாஷ்யம் | ... | 1—4—0 |
| பாராசரஸ்மிருதி | ... | 1—2—0 |
| கல்கிபுராணம் | ... | 0-12—0 |
| தசாவதாரப்பிரபாவம் வசனம் | ... | 1—0—0 |
| வாஸந்திகாதமிழ் (நாடகம்) | ... | 0—8—0 |
| ஸத்குருதியாகராஜஸ்வாமி சரித்திரம் | ... | 0—1—0 |
| சங்கரபகவத்பாதாசாரியர் சரித்திரம் | .. | 0—1—0 |
| மஹாமஹதீர்த்தமாக்ஷி | ... | 0—1—0 |
| ஸ்ரீமங்களாம்பிகை ஆதிகும்பேசுவரர் பதிகம் | ... | 0—0—6 |
| ஈசாவாஸ்யோபநிஷத்தேவநாகரி எழுத்தில் சுலோகமும் தமிழில் திரிமதபாஷ்யமும் A. சிவராவ்பதிப்பு. | ... | 1—8—0 |

| | |
|---|---|
| கேனோபநிஷத்தேவநாகரம் கிரந்தம் எழுத்துக்களில் சுலோகமும் தமிழில் திரிமதபாஷ்யமும் ஷை பதிப்பு. | 1—12—0 |
| கடோபநிஷத் திரிமதபாஷ்யம் ஷை ஷை ... | 4—0—0 |
| முண்டகோபநிஷத் ஷை ... | 2—8—0 |
| மாண்டூக்கிய உபநிஷத் ஷை ... | 3—8—0 |
| தைத்திரியோபநிஷத் ஷை .. | 6—0—0 |
| கைவல்யோபநிஷத் தமிழ்ச்சூத்திரம் பாஷ்யத்துடன் ... | 0—6—0 |
| கைவல்யோபநிஷத் கிரந்தசுலோகமும் தமிழில் பாஷ்யமும் ... | 0—12—0 |
| கர்ப்போபநிஷத் ஷை .. | 0—12—0 |
| அதர்வசிரோபநிஷத் ... | 0—4—0 |
| புருஷசூக்த பாஷ்யம் (தமிழ்) ... | 0—6—0 |
| அதர்வசிகோபநிஷத் ஷை .. | 0—4—0 |
| மைத்திராயணீயோபநிஷத் ... | 0—15—0 |
| குமாரதேவர் 16 சாஸ்திரம் மகாராஜா துறவுமுதலியன. | 0—1—0 |
| பிரபோதசந்திரோதய வசனம் அல்லது மெய்ஞ்ஞான விளக்கம். .. | 1—0—0 |
| ஒழிவிலொடுக்கம் சிதம்பரசுவாமிகள் உரையுடன் காலிகோபயிண்டு கிலிட்டுடன் ... | 1—0—0 |
| சுகர்கைவல்யம் ... | 0—2—0 |
| வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தின் பிற்பகுதி சௌத்திக பருவமுதல் இறுதிசொர்க்காரோகண பருவம்வரையும் 2500 செய்யுட்கள் (அரங்கநாதகவிராயரியற்றியது). | 1—8—0 |
| பெரியபுராணவசனச்சுருக்கம் (பாக்கெட்) ... | 0—10—0 |
| வள்ளலார் 20 சாஸ்திரம் ... | 1—8—0 |
| பெரியபுராணம் திருவிளையாடல் வசனச்சுருக்கம் (பாக்கெட்) ... | 1—0—0 |
| விவேகானந்தவிஜயம் :—விவேகானந்தசுவாமிகளின் திவ்விய சரித்திரமும் அவர்செய்த அற்புதமான பிரசங்கத்திரட்டும் சுவாமிகள் படத்துடன் காலிகோபயிண்டு | |

அ ஸ்ரீ சாரதாமந்திரபுஸ்தகசாலை, தஞ்சாவூர்.

| | |
|---|---|
| திருவிளையாடற்புராணவசனச்சுருக்கம் (பாக்கெட்)... | 0-10—0 |
| கந்தரநுபூதி உரை ... | 0—6—0 |
| விஷப்பிரதிவிஷத்திரட்டு முதலியன ... | 0—1—0 |
| அகஸ்தியர் தேவாரத்திரட்டு மூலமும் உரையும் ... | 0-12—0 |
| சௌந்தரியலகரிமூலமும் உரையும் ... | 0—6—0 |
| சிற்றின்பசாஸ்திரசிந்தாமணி ... | 0—4—0 |
| வேளாளசூளாமணி ... | 0—4—0 |
| மானிடமர்மசாஸ்திரம் ... | 5—0—0 |
| விவேகசூடாமணி தமிழ் மூலம் ... | 0—8—0 |
| தோடகம் ... | 0—4—0 |
| சிவமகிம்நஸ்தோத்திரம் ... | 0—1—0 |
| அறிவாநந்தசித்தியார் ... | 0—4—0 |
| வைசியகுலவிளக்கம் ... | 0—[illegible]—0 |
| நவநீதசாரம் ... | 0—[illegible] |
| ஸ்ரீ வித்தியாரண்யஸ்வாமிகளால் செய்யப்பட்ட பிரஹ்மஷ்தாசீர்வாதபந்ததி சமஸ்கிருதமும், தமிழும் ... | 0—1—0 |
| கைவல்யம் ஸ்ரீமத் பொன்னம்பலஸ்வாமிகள் உரையுடன் | 2—0—0 |
| மாதரொழுக்க இலக்கணம் ... | 0—2—0 |
| குசேலோபாக்கியாணம் மூலம் ... | 0—6—0 |
| ஆரியதர்மம் ... | 0—0—6 |
| திருக்காளத்திப்புராணம் செய்யுள் ... | 0—6—0 |
| பிரபுலிங்கலீலைசெய்யுள் ... | 0—6—0 |
| திருக்குறள் மூலம் ... | 0—4—0 |
| நன்னூல் மூலம் ... | 0—1—6 |
| Rules for Daily life ... | 0—8—0 |
| Godward Ho! ... | 0—2—0 |

இதில் காணப்படாத மற்றும் அநேக புஸ்தகங்களுண்டு.

வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ்,
சாரதாமந்திரபுத்தகசாலை, வடக்குவீதி,
தஞ்சாவூர்.

S. V. V. PRESS., TANJORE.